*Kumaraṉ*

*Āram 13, muttu 6*

*October 10, 1935*

Record no. 313

REG. NO. M. 1823. 16 பக்கங்கள். KUMARAN WEEKLY

சந்தா விவரம்.

உள்நாடு வருஷம் ஒன்றுக்கு ரூ. 5-0-0
ஆறு மாதம் 3-0-0

ஸிலோன், பர்மா வருஷம் ஒன்றுக்கு ரூ. 6-0-0

மலாய் முதலிய வெளிநாடு வருஷம் ஒன்றுக்கு ரூ. 7-0-0

# குமரன்

விளம்பரம்.

நோட்டீஸ், கோர்ட் விளம்பரம் முதலியவைகளுக்கு இஞ்ச ஒன்றுக்குரூ. 2-0-0
வியாபார சம்பந்தமானது ரூ. 0-12-0
ஒப்பந்த விளம்பரத்துக்கு மானேஜருக்கெழுதவும்.

(மாதப்பதிப்பும் சேர்ந்தது.)

வியாழன் தோறும் வெளிவரும்

PUBLISHED EVERY THURSDAY

ஆசிரியர்:— சொ. முருகப்பா.

ஆரம் 13. | காரைக்குடி, யுவ-ஞு புரட்டாசி-மீ 24-உ (10—10—35.) | முத்து 6.

## கல்யாண சீர்திருத்தம்

(கண. சுப்பிரமணியன்.)

சீர்திருத்தங்களைப் பற்றிப் பெரியார் மு. சின்னையா செட்டியாரவர்கள் குமரனில் தொடர்ந்து எழுதிவருகிறார்கள். அதைப்படித்து மகிழ்ச்சியடைபவர்களில் நானுமொருவன். சீர்திருத்தத்திற்காகவே தங்கள் வாழ்நாளில் பெரும் பகுதியைச் செலவிட்டு யோசித்து யோசித்து முயற்சி செய்து தோல்விக்கும் எதிர்ப்புக்குமஞ்சாமல் தொண்டாற்றி வருகிற பலர் நம் சமூகத்தில் தோன்றியிருப்பதினால்தான் நமது சமூகமானது இன்று உயர்ந்து வருகிறது. தென்னாட்டிலுள்ள பல வேறு சமூகங்களைக் காட்டிலும் நமது நாட்டுக்கோட்டையார் சமூகம் அதியுன்னத நிலையில் சீர்திருந்திவருகிறது. சென்ற இருபதாண்டுகளுக்கு முன்னிருந்தே சீர்திருத்த இயக்கம் தோன்றிவளர்ந்து வருகிறது. தனவைசிய ஊழியர் சங்கம் தான் சீர்திருத்தத்தை அழுத்தி ஊன்றிய தென்று கூறலாம். அதில் முக்கியஸ்தர்களாக நின்று வேலை செய்தவர்கள் சொ. முருகப்பா, பிச்சப்பா சுப்பிரமணியன், ராய. சொக்கலிங்கம், வயிசு. ஷண்முகன் முதலிய பலராவர். இவர்கள் சீர்திருத்தத்தில் முதலாவதாகக் கொண்டது கல்யாண சீர்திருத்தமேயாகும். இந்தத் திருத்தத்தை தாங்களாகவோ தனி மனிதர் மூலமாகவோ செய்ய முற்படவில்லை. சமூகம் முழுமையுமே ஒன்று சேர்த்துச் செய்யவே விரும்பினார்கள். அதன்படியே தொண்ணூற்றூறார்க்கூட்டம் கூட்டினார்கள். அதில் பெண்ணுக்கு 7000 வாங்கலாமென்று தீர்மானித்தார்கள். பெண்ணுக்குக் காலணாகூட வாங்கக்கூடாதென்னும் கொள்கையுள்ள சீர்திருத்தக்காரர்களும் ஒத்துக்கொண்டார்கள். காரணமென்னவென்றால் சமூகம் முழுமையும் ஒரு கட்டுப்பாட்டுக்குள் வருவதால் பின்னால் வரவர திருத்தலாமென்னுங் கருத்தினால்தான். வலுவாயர்கள் சிலர் சேர்ந்து அநியாயம் செய்து கூட்டத்தையே கவிழ்த்துவிட்டார்கள். இந்தக் கூட்டம் கெட்டபிறகு வாலிபர்கள் தான் நச்சாந்துப்பட்டியில் மறியல் செய்து கெடுத்துவிட்டார்களென்றும் பெரியவர் பொறுப்பிலிருந்தால் தீர்மானம் யானையாக வளர்ந்துவிடுமென்றும் சிலர் கூறினார்கள். அதையும் பார்த்துவிடலாமென்று மறுபடியும் கூட்டம் போட்டார்கள். பெண்ணுக்கு விலை 13000 வாங்கலாமென்று ஏடு எழுதினார்கள். இந்தக் கூட்டத்தை வாலிபர்கள் பொறுப்பில் நடத்தவில்லை. ஊழியர் சங்கத்தார் கூட்டவில்லை. ஆனால் சிவநேசர்களும் பெரிய ஐயாக்களும் பொறுத்து நடத்தினார்கள். தீர்மானங்கள் காற்றில் போய் இரண்டறக் கலந்துவிட்டன. சிவநேசர்கள் இந்தக் கூட்டங்களில் "நமப்பார்வதிபதே" போட்டது ஒருலட்சம் முறையாவதிருக்கும். கடவுள் பக்தியோடு பழய முறைப்படி ஓலையெழுதி மஞ்சள் தடவி மரியாதையாக நடத்தினார்கள். கூட்டம் போயே போய்விட்டது. இதற்கப்பால் பல வருஷங்களும் ஆகி விட்டன. கூட்டத்தினால் சீர்திருத்தம் ஆகவே ஆகாதென்பது நிச்சயமாகி விட்டது. இனிக்கூட்டப் பேச்சுப் பேசித் தீர்மானமெழுதுவது சிரிப்புக்கே இடமாகும். அது ஒரு ஆகாவாரி வேலை. ஒவ்வொருவரும் தங்கள் தங்களாலானமட்டும் சீர்திருத்தமாக நடக்க வேண்டியது தான் நியாயமாகும்.

நமது பெரியார் சின்னையா செட்டியாரவர்கள் இவைகளை நன்கு அறிவார்கள். என்றாலும் அக்டோபர் 3உ குமரனில் மூன்று நாள் கலியாணந்தான் சரியானது என்று எழுதியிருக்கிறார்கள். ஒரு நாள் கலியாணம் பின்னால் வரவேண்டியதென்கிறார்கள். இது ஒரு மிதவாதமாகும். 8 நாள் கலியாணக்காரர் 3 நாளுக்கும் ஒத்துக்கொள்ளப் போகிறதில்லை அவரவர் சௌகர்யப்போல் விட்டுவிட வேண்டியதுதான் சரி. ஆட்டம் போடுகிறவர்கள் எட்டுநாள் ஆடட்டும். மற்றவர்கள் ஒருநாளில் ஒரு நாழிகையில் முடிப்பதில் என்ன ஆட்சேபனை? கையில் அதிகப் பணமில்லாததால் கல்யாணம் செய்துகொள்ளாமலும், புதுமை செய்யாமலும் இருக்கவேண்டுமா? புதுமையை 50 ரூபா செலவிலும், கல்யாணத்தை 200 ரூபா செலவிலும் முடிப்பதால் யாருக்கு கஷ்டம். 8 நாள் கல்யாணத்துக்கு 3000 செலவென்றால் 3 நாள் கல்யாணத்துக்கு 1500 வரத்தானே செய்யும்? பிச்சப்பா சுப்பிரமணியம் கல்யாணத்துக்கு 700 செலவென்றால் இன்னும் சுலபமாக 200, 250 ல் செய்ய வழி பார்க்கவேண்டுமே தவிர மூன்று நாள் தொழுவில் ஏன் மாட்டிக் கொள்ளவேண்டும்?

பெரியார் சின்னையா செட்டியாரவர்கள் இதனை யோசித்துப் பார்க்கவேண்டும். அமராவதிபுதூர் கல்யாணத்தைப் பாராட்டியிருப்பதோடு, அதன் செலவு விபரங்காட்டி அதையும் பாராட்டியிருக்கிறார்கள். ஆனால் மூன்றுநாள்கல்யாணம் சரியென்று சொல்வது முரண்பாடாகவுமிருக்கிறது. இன்னமும் நாம் மழுப்பிக்கொண்டும் பின்வாங்கிக்கொண்டும் காலத்தைக் கடத்துவதில் பிரயோசனமில்லை. முன்னே வைத்த காலைப் பின்னே வைத்து நடப்பதால் நட்டந்தான் வரும். கூட்டத்தில் சீர்திருத்தம் வந்தமட்டும் போதுமென்று நினைத்து விட்டுக்கொடுத்ததால்தான் நாம் செய்வதும் போய் கூட்டத்தீர்மானமும் போய்விட்டது. ஆதலால் தைரியமாகச் சீர்திருத்தம் செய்ய வேண்டுமே தவிர வழவழ வெண்டிக்கா யென்று மூன்று நாளுக்குத் தாளம் போட்டுவிட்டு அப்பால் அதுவும் நடக்காமல் அடியைப் பிடியடா பாரதப் பட்டா என்று புதுக்கணக்குப் போடவேண்டியிருக்கும். அதற்கு இப்போதே ஒரேயடியாகத் தட்டிவிட வேண்டியதே நன்மையாக இருக்கும். இதில் குற்றங் குறையிருந்தால் பெரியோர்கள் மன்னிக்க வேண்டியது.

# முசோலினியின் வீரப்பேச்சு

## கோடி ஜனங்கள் கூடினர்.

## "4,40,00,000 இதாலியருக்கும் ஒரே நோக்கம்"

கொழும்பு அக்டோ 6.

ஸிஞ்ஞோர் முசோலினி, அக்டோபர் 2உ ரோமாபுரியில்நிகழ்த்தியபிரசங்கத்தின் முழுவிபரமும் ரேடியோ மூலமாக அன்றைக்கே இங்குள்ள இத்தாலி ஸ்தானீகர் காரியாலயத்துக்குக் கிடைத்துளது. அதன் விபரம் பின் வருமாறு:—

"இத்தாலியப் புரட்சியின் கருப்பங்கி வீரர்களே! இத்தாலிய சகோதார்களே! சகோதரிகளே! உலகமெங்கும் ஆங்காங்கு வாழும் இத்தாலியர்களே!. மலைகளுக்கப்பாலும் கடல்களுக்கப்பாலும் உள்ள இத்தாலியர்களே! கேளுங்கள்!!

நமது தாய்நாட்டின் சரித்திரத்தில் மிகப் புனிதமான சமயம் வந்துவிட்டது. இத்தாலியெங்கும் உள்ள நகர மைதானங்களில் இரண்டு கோடி இத்தாலியர்கள் இது சமயம் கூடியிருக்கிறார்கள். மானிடச் சரித்திரத்திலேயே இக்கூட்டம் மிகப்பெரியதோன்றாகும். ஒரு கோடி மக்கள்! இவர்கள் ஸ்தூல உடம்பின் எண்ணிக்கை மட்டுமே ஒரு கோடி! ஆனால் இவர்களின் இருதயமும், மனவுறுதியும் ஒன்றே. இந்த ஒற்றுமையால் நமக்கு விளங்குவதென்ன? இத்தாலியும் பாஸிஸ்டு இயக்கமும் ஒன்றுபட்டுவிட்டது! பூரணமாக ஒன்றுபட்டுவிட்டது! ஒன்றிலிருந்து மற்றொன்றை வேறுகப் பிரிக்கமுடியாது! மூளை கலங்கிய சிலர், அறியாமையினால் வேறுவிதமாகக் கருதுகிறார்கள். பாவம்! அவர்களுக்கு 1935ம் வருடத்திய இத்தாலி எத்தகைத்யது என்பது தெரியாது.

### விதிச் சக்ரம்.

கடந்த பல மாதங்களாக நமது விதியென்னும் சக்கரம், நமது மனோவுறுதியைத் துணைக்கொண்டு நாம் விரும்பும் குறிக்கோளை நோக்கி சுழன்று செல்கிறது. அந்தச் சக்கரத்தின் வேகம் கடந்த சில மணி நேரமாக அதிகரித்திருக்கிறது! அதைத் தடுக்க இனி முடியாது.

இந்தப் பரந்த நிலப் பரப்பில் நமக்குக் கொஞ்சம் பூமி வேண்டுமெனக் கேட்கிறோம். நாம் நியாயமாகவே கேட்கிறோம். மற்றவர்கள் நமது நிலத்தைப் பறித்துக் கொள்ள மூளுகிறார்கள். இந்த அநியாயமான அநீதியைக் கண்டு நமது இத்தாலிய ராணுவம் நமது கோரிக்கையை எவ்விதத்திலும் நிறைவேற வேண்டுமென்ற மனவுறுதியோடு சென்றிருக்கிறது ராணுவம் மட்டுமல்ல! 44,000 000 இத்தாலியர்களும் சென்றிருக்கின்றனர். இவர்கள் அனைவரும் ஒரே நோக்கத்துடன் ஒற்றுமையாகச் சென்றிருக்கின்றனர்.

### வாக்குறுதிகள்

1915-ம் வருடம் நாம் நேச வல்லரசுகளோடு சேர்ந்துகொண்டபோது, அவர்கள் நம்மை எவ்வாறு வியந்து கூறினர் என்பதைப் பார்க்கவேண்டுமே! நம்மை அவர்கள் வாயாரப் புகழ்ந்தனர்! வாழ்த்துக்கூறினர்! எத்தனை வாக்குறுதிகள்? வாக்குறுதிகளல்ல! ஆசை வார்த்தைகள்!

போர் முடிந்தது. எல்லோருக்கும் பொதுவாக வெற்றி கிடைத்தது. நாம் 670000 வீரர்களைப் பறிகொடுத்தோம்! 4,00,000 இத்தாலியர்கள் ஆயுள் முடிய அங்கவீனராயினர். 1,000,000 பேர்கள் காயமடைந்தனர். இத்துணைத்தியாகம் செய்த நமக்குக் கிடைத்ததென்ன? சமாதானம் செய்து கொள்ள எல்லோரும் மேஜையைச் சுற்றி உட்கார்ந்தோம். மற்றவர்கள் ஏராளமாகப் பங்கிட்டுக்கொண்டார்கள். நமக்கு அவர்கள் கழித்ததுதான் கிடைத்தது. 13 வருடகாலமாக நாம் நியாயத்தை எதிர்பார்த்த வண்ணம் பொறுமையுடனிருந்தோம். ஆனால் நமது சக்தியை நசுக்கிவிட எண்ணங்கொண்டவர்கள் நம்மை நெருக்கிக் கொண்டே வருகிறார்கள். எத்தியோப்பியாவோடு நாம் 40 வருடங்களாகப் பொறுமையாகவே இருந்து பார்த்தோம். இனிப்பொறுக்கமுடியாது! பொறுத்ததெல்லாம் போதும்! போதும்!!

### நிர்ப்பந்தங்கள்

சர்வதேச சங்கத்தில் நமது நியாயமான உரிமைகளை அங்கீகரிப்பதற்குப் பதிலாக அவர்கள் "ஸாங்ஷன்" என்று உச்சரிக்கவும் துணிந்துவிட்டனர்! நமது பிரஞ்சு நண்பர்கள் நமக்கு விரோதமான நடவடிக்கைகளில் கலந்து கொள்வார்களென நான் நம்பமாட்டேன்.

பிலிக்னி யுத்த களத்தில் மடிந்த 6000 இத்தாலியர்களுடைய வீரத்தை நமது எதிரிகளும் புகழ்ந்தனர். பிரான்ஸ் இது சமயம் நமக்கு விரோதமாக எழுமாயின், மேற்கூறிய வீரர்களின் சமாதிகளே குலுங்க ஆரம்பித்து விடும்!

### பதிலுக்குப்பதில்

காட்டு மிராண்டிகள் நிறைந்த நாடென்றும், நாகரீகமுள்ள உலகத்தில் இருப்பதற்கே யோக்கியதையற்றதென்றும் சகல நாடுகளாலும் ஒப்புக் கொள்ளப்படுகிற ஒரு ஆபிரிக்கா தேசத்துக்காக, பிரிட்டிஷ் மக்கள் தங்கள் இரத்தத்தைச் சிந்துவார்களென்றாவது, அதன் மூலம் ஐரோப்பா முழுவதையும் யுத்த களத்துக்கு இழுத்துவிடுவார்களென்றாவது நான் நம்பமாட்டேன். பிரிட்டனும் பிரான்ஸும் நடைமுறையில் நமக்கு மாறாக இதுவரையில் எதுவும் செய்யவில்லை. எனவே அவர்களை நான் விரோதிகளென நம்பமாட்டேன்.

ஆனால் நாளை நேரிடப்போவதைப்பற்றி நாம் கவலைப்பட வேண்டாமென்று நான் சொல்லவில்லை. நிர்ப்பந்தங்கள் நமக்கு விரோதமாகப் பிரயோகிக்கப்படலாம். அவை பொருளாதார பகிஷ்காரமாயிருப்பின் நாம் நிதானமாகவும் ஒழுங்காகவும் தியாக புத்தியோடும் நடந்துகொள்வோம். ராணுவ பகிஷ்காரத்தை அவர்கள் மேற்கொள்வார்களாயின் நாமும் பதிலுக்குப் பதில் செய்வோம்! நம்முடன் அவர்கள் யுத்தத்துக்கு வந்தால் நாமும் யுத்தத்துக்கு ஆயத்தமாயிருக்கிறோம்!

நம்மை வளைத்துவிடலாமென்று ஒருவனும் எண்ணி ஏமாறவேண்டாம். நாம் கடுமையாகப் போராடாமல் ஒரு நாளும் பணியமாட்டோம். நமது கௌரவமும், நமது எதிர்கால வாழ்வுமே நமக்கு வேண்டும். அதைக் காப்பாற்ற நாம் போர் செய்வோம்.

ஆனால் ஒரு விஷயத்தை மட்டும் நாம் மறந்துவிடக்கூடாது. குடியேற்ற நாட்டுக்காக நாம் தொடங்கியிருக்கும் இப்போராட்டம் ஐரோப்பிய யுத்தமாக விளைந்துவிடாதபடி நாம் நம்மாலியன்ற மட்டிலும் முயற்சிக்கவேண்டும் எனவே பழைய தோல்விகளுக்காக வஞ்சம் தீர்த்துக் கொள்வதற்கு இதுவே சமயம் என்று யாரும் எண்ணவேண்டாம்.

இத்தாலியர்கள் தங்கள் மனவுறுதியையும், உற்சாகத்தையும் கௌரவத்தையும், ஒழுக்கத்தையும் இப்போதைப்போல் ஒருபோதும் ஒற்றுமையாக வெளிக்காட்டியதில்லை. உலகம் முழுதும் நமக்குக் கடமைப்பட்டிருக்கிறது. நாமே நாடுகளை ஜெயிக்கும் வழியை உலகத்துக்குக் கற்றுக்கொடுத்தோம். வீரர்களென்ன, சாதுக்களென்ன, கவிஞர்களென்ன, ஓவிய நிபுணர்களென்ன, சிற்ப நிபுணர்களென்ன, மாலுமிகளென்ன, இன்னும் எத்தனையோ அறிஞர்கள், ஆராய்ச்சியாளர்கள், சாஸ்திரக்காரர்கள் எல்லோரையும் உலகத்துக்கு உதவிய நம்மீது மற்றவர்கள் நிர்ப்பந்தங்களைப் பிரயோகிப்பதாகப் பேசுவதா? என்ன துணிவு?

இத்தாலியே! ஒற்றுமையான இத்தாலியே! பாஸிஸ்ட் இத்தாலியே! புரட்சி இத்தாலியே! எழுக! எழுக! உங்கள் மனவுறுதியும் உங்கள் வீரமுழக்கமும் வானத்தை எட்டட்டும்! கிழக்காப்பிரிக்காவிலுள்ள நமது ஸோல்ஜர்களின் செவிகளுக்கு எட்டட்டும்! யுத்தத்துக்கு ஆயத்தமாகப் போர்க்களத்தில் நிற்கும் அந்த வீரர்களுக்கு ஆறுதலளிக்கட்டும்! நமது நண்பர்களுக்கு உற்சாகமூட்டட்டும்! நமது எதிரிகளுக்கு எச்சரிக்கையாக நமது முழக்கம் காக்கட்டும்! இத்தாலி! இத்தாலி! இத்தாலி! "இத்தாலி" என்னும் முழக்கம் மலைகளையும், சமுத்திரங்களையும் கடந்து செல்லும்! நமக்கு நீதி வேண்டும்! நீதியை நாடும் நமக்கு வெற்றி நிச்சயம்! "வெற்றி" யென்றே நாம் முழங்குவோம்!"





# கோபத்தில் வந்த சீர்திருத்தம்

S. S. ராஜன்

கண்ணங்குடி ஒரு சிறு கிராமம். அவ்வூரில் புராதன வைணவக் கோவில் ஒன்றுண்டு. அங்குள்ள வைணவர்கள் சனாதனப் புலிகள், சனாதன தர்மம், தங்களால்தான் பாதுகாக்கப்பட்டு வருகிறது என்ற எண்ணத்தையுடையவர்கள். தீண்டாமை விலக்கை ஆதரிக்கும் பிராமணச் சிறுவர்களைக் கண்டாலும் அவர்களுக்குப் பிடிக்காது. அவர்களைக்கேட்டால் 'துஷ்டரைக் கண்டால் தூரவிலகு' என்ற நீதிவாக்கியத்தைத் தாங்கள் கடைப்பிடித்துவருவதாகக் கூறுவார்கள். இது ஆச்சரியமல்ல. அந்த ஊரில் 'மத்தியானப் பறையர்' என்ற வகுப்பைச் சேர்ந்த இரண்டு குடும்பங்கள் இருக்கின்றன. பகல் பன்னிரண்டு மணியிலிருந்து ஒன்றரை மணிவரை, அவர்கள் வீடுகளில் இருக்கக்கூடாது.

இதரப் பிராமணர்களுடன் கலந்தும் உறவாடக்கூடாது. மற்ற நேரங்களில் அவர்கள் தாராளமாகக் கோவில் முதலிய பல பொதுவிடங்களுக்குப் போகலாம். அவர்கள் செய்த தீவிர முயற்சிகளின் பயனாகக் கொஞ்சம் சுவதந்திரம் அளிக்கப்பட்டிருக்கின்றனர்.

இத்தகைய சனாதனப் பேய் பிடித்து அலையும் ஊரில் ஹரிஜனங்கள் எவ்வாறு சுவதந்திரத்துடன் வாழமுடியும்? அவர்கள் ஊருக்கு மூன்று மைல் தூரத்திலுள்ள சேரியில் வசித்து வருகின்றனர். அவர்கள் தங்களுடைய விடுதலைக்காகப் பலர் பாடுபடுகின்றனர் என்பதைக்கூட அறியார். அடிமை வாழ்க்கையிலேயே தங்கள் வாழ்நாளைக் கழிப்பதற்குத்தான் பிரமன் தங்களைச் சிருஷ்டித்திருக்கிறான் என்ற நம்பிக்கை அவர்களிடம் குடிகொண்டிருந்தது. தீண்டாமைவிலக்குப் பிரசாரம் செய்ய வந்த சிலவாலிபர்கள் அவ்வூரினின்று அவர்களால் அடித்துத் துரத்தப்பட்டதிலிருந்து இது நன்கு விளங்கும். அவர்களைக் குற்றம் சொல்வதற்கில்லை. அவர்களை அடிமைகொண்டவர்கள் அவ்வாறு அவர்களைப் பழக்கியிருக்கின்றனர். தற்பொழுது, அவ்வூர் ஹரிஜனங்கள் மிகுந்த கொடுமைகளுக்கு ஆளாயிருக்கின்றனர். ஜீவ இரக்கம் உள்ளவர்கள் தாழ்த்தப்பட்டவர்களுக்காகப் பரிந்து பேச வந்தால் அவ்வூர் சனாதனிகளுக்குக் கடுங் கோபமுண்டாகிவிடும். தங்களது கோபத்தை அந்த ஏழைப் பரதேசி மக்களிடம் காட்டி முன்னிலும் பன்மடங்கு அதிகமாகத் துன்புறுத்துவார்கள். என்ன அநியாயம்! இந்தக் கொடுமை என்று ஒழியுமோ? என்றுதான் அவர்கள் விடுதலை பெறுவார்கள்?

அவ்வூர் சுந்தரராஜப்பெருமாளுக்கு வைகாசி மாதம் வசந்த உற்சவம் வந்தது. ஒவ்வொரு வருஷமும் இந்த உற்சவம் அங்கு வெகு விமரிசையாக நடைபெறும். குறைந்தது இருநூறு ரூபாயாவது செலவழியும். ஆனால் வௌவால்களும், அணில்களும், பாம்புகளும் நிறைந்திருக்கும் அந்தக் கோவிலை மராமத்துச் செய்ய ஒருவரும் முன்வரவில்லை. அந்த உத்சவம் நடத்த அங்குள்ள ஹரிஜனங்களும் தங்களாலியன்ற பண உதவி செய்திருக்கின்றனர். அதுவும் மிகுந்த கட்டாயத்தின் பேரிலும், பயமுறுத்தலினாலும்!

ஒரு நாள் காலை பத்து மணியிருக்கும், அன்று கஜேந்திர மோக்ஷம் என்ற திருநாள். ஊருக்கு இரண்டு மைல் தூரத்திலுள்ள ஒரு சிற்றாறுக்குப் பெருமாளை எழுந்தருளப் பண்ணிக்கொண்டு அங்குச் சென்றனர். ஒரு விஷயம் சொல்ல மறந்துவிட்டேன். பிராமணர்களைத் தவிர, அதுவும் வைணவர்களைத் தவிர வேறு ஒருவரும் பெருமாளை எழுந்தருளப் பண்ணக்கூடாது!

பெருமாள் போன மும்முரத்தில், அவருக்கு, நான் பின்னால் சொல்லப்போகும் கதி ஏற்படப்போகிறது என்று நான் கனவிலும் எண்ணவில்லை. ஏதோ இந்த வருஷத்தில், சுவாமிகளுக்கெல்லாம் பீடையென்றே சொல்ல வேண்டியதாயிருக்கிறது. எந்த ஸ்தலத்தில் பார்த்தாலும் சச்சரவுகளே இருந்துவருகின்றன. சனாதனிகள் பிராயச்சித்தம் செய்ய முன்வருவார்களா? நம் சுந்தர ராஜப் பெருமாளைப் பிடித்த பீடை மிகவும் கொடுமை!

ஆற்றுக்குப் போய்ச் சேரும் வரையில் பல்லக்குத் தூக்கிகள் சச்சரவு செய்யாமலே இருந்தனர். ஆனால், பட்டர் சும்மா இருக்கிறாரா? முக்கால்வாசி கோயில்களில் பட்டர்களாலேயே தகராறு. நம்ம பட்டர் சற்றுக் கவனித்துக் காரியத்தைச் செய்திருக்கக்கூடாதா? பல்லக்குத் தூக்கிகளில் ஒருவர்தான் முதல் தீர்த்தத்திற்குப் பாத்தியஸ்தர். அவருக்கே முதலில் தீர்த்தம், துளசி, சடகோபம், முதலியவைகள் சாதிக்கவேண்டும். அதைவிட்டு கோயில் மணியக்காரருக்கு அந்த மரியாதைகள் செய்தால், நம்ம முதல் தீர்த்தக்காரர் பொறுப்பாரா? தம் ஆயுட் காலத்தில், அதைப் போன்ற அவமானம் தமக்கு ஏற்பட்டதில்லையென்றுகூறி மிகுந்த கோபத்துடன் போய்விட்டார். அவருடைய கூட்டத்தார் செம்மறியாட்டுக் கூட்டத்திற்கு இளைத்தவர்களா? உடனே, அவர்களும், பெருமாளை இறக்கிவைத்துவிட்டுப் போய்விட்டார்கள். அட! நாராயணா! குடைகள் தீவட்டிகள் முதலியவைகளைக்கூடவா கொண்டுபோய் விடவேண்டும்? சூரியவெளிச்சம் பட்டு அறியாத கோவில் கர்ப்பக்கிரகத்திலிருந்த பெருமாள், அவனது பூரணப் பிரகாசத்தில் நின்று தவிக்கும்படியான கஷ்டகாலம் ஏற்பட்டு விட்டது. கூடிய சீக்கிரம் ஒரு கலகம் ஏற்படுமென்பதை யறிந்து கொண்டு, அங்கு கூடியிருந்தவர்கள். ஒவ்வொருவராகப் பின்வாங்க ஆரம்பித்து விட்டார்கள்.

அடுத்த ஊரிலுள்ள குடிஜனங்கள், பெருமாள் மீது இரக்கம் கொண்டு அன்று மாலை நான்குமணிக்கு அவரைக் கோவிலில் கொண்டு போய்ச்சேர்த்தனர்.

மறுநாள் காலை எட்டுமணி யிருக்கும். கோவிலில், வெகு மும்முரமாக வினியோகம் கொடுத்துக் கொண்டிருந்தார்கள். அன்று நாட்டார் மண்டகப்படி. ஒவ்வொருவரும் தேங்காய்ப் பரிமாணமுள்ள அக்காரவடிசிலும், புளியோதரையும் வாங்கிக் கொண்டு வந்து கொண்டிருந்தார்கள். வெகு நேரம், வாயிலிலேயே நின்று கொண்டிருந்த ஒரு சிறுவனுக்கு நாக்கில் தண்ணீர் சொட்டியது. அவன் சர்க்கரைப் பொங்கல் என்பதைக் கண்ணாலும் கண்டு அறியான். ஆதலால், அதை ருசிபார்க்க வேண்டுமென்ற ஆசை அவனுக்கு இருந்தது. இயல்புதானே! மேலும், அவனுக்கு வயது ஆறுக்குமேல் இராது. தன் பெற்றோர் அடிமைப்பட்டு வாழ்கின்றனர் என்பதையவன் அறிந்திருக்க மாட்டான். தன்னை யொத்த குழந்தைகள் கைகள் நிறைய தின்பண்டங்கள் வாங்கிக் கொண்டு வரும் பொழுது, தான் ஏன் போகக்கூடாது என்ற எண்ணம் அவனுக்கு உதித்தது. இது என்ன குற்றமா? அச்சமயம் யாரேனும் அவனைத் தடுத்திருப்பார்களாயின், அவனுக்குத் துன்பம் நேரிட்டிருக்காது.

வினியோகம் கொடுத்து விட்டுக் கோவில் சமயல்காரர் உள்ளே போகும் சமயம். அந்தச் சிறுவன் ஓடோடியும் சென்று மிகுந்த ஆவலுடன் தன்கையைநீட்டினான். அந்தோ பரிதாபம்! கஷ்டகாலம்! பட்டர், அவனை நோக்கி, மிகுந்த அருவருப்புடன் "நீயாரடா? எங்கே வந்தாய்? போடா தள்ளி" என்றார். அவன் "சாமி! சோறு" என்றான்.

கூட்டத்திலிருந்து கொண்டு ஒருவர் "அடடா! அந்தப்பையன் யாருன்னு விசாரியுங்கோ"

மற்றொருவர் 'மோசம் போச்சு! குடி கெட்டுப்போச்சு. இந்தக் கோவில்லே இருக்கக்கூட யோக்யதை யில்லே. ஐயையோ!" என்று சொல்லிக் கொண்டே அவர் மிகுந்த பரபரப்புடன் வெளியே போய் விட்டார் உடனே ஒரு பெருத்த குழப்பமுண்டாகி விட்டது. சமாசாரமும் வெளியாகி விட்டது. அங்கு கூடியிருந்தவர்கள், அந்த ஹரிஜனப் பையன் மேல் விழுந்து அவனை யமுக்கிக் கொண்டார்கள். சிலர் "பளீர், பளீர்" என்று அவனை அறைந்தார்கள். சிலர் புளிய மிலாறினால் அடித்தார்கள். பரிதாபம்! பரிதாபம்!! "இல்லேசாமி, இன்னமேக் கோவிலுக்குள்ளே வல்லே சாமி" என்று அவன் கூச்சலிடுவது கன்னெஞ்சத்தவரையும் கரைத்து உருகச்செய்யும். அவனது உடலின் பல பாகங்களிலிருந்து இரத்தம் பீறிட்டுக்கொண்டிருந்தது. அவனால் நிற்பதற்குக் கூடச் சக்தியில்லை. அம்மட்டிலும் அவனை விட்டார்களா அந்தப் பாதகர்கள்? அவனைப் பரபரவென்று கோவிலுக்கு வெளியே இழுத்து வந்து கொட்டகைக் கால் ஒன்றில் கட்டிவிட்டார்கள். அவனுக்குக் கால்கள் நடுங்கின. வலியின் மிகுதியால்; அவைகள் துவள ஆரம்பித்தன, தன்னைப்படுக்கவைக்கவேண்டுமென்று அவன் கதறினான். கெஞ்சினான். கும்பிட்டான். அவன் கெஞ்சுவதினால், தண்டனைகள் ஜாஸ்தியானதேயொழியக் குறைவுபட்டதாயில்லை.

அச்சமயத்தில் கோவிலில், கற்கள்வந்து விழுவதைச் சிலர் அறிந்துகொண்டு தங்களுக்குள்ளே முண முணத்துக்கொண்டிருந்தனர். வெகு சீக்கிரம், அந்தச் சமாசாரம் எங்கும் பரவி, எல்லோருக்கும் மிகுந்த ஆத்திரத்தையுண்டாக்கியது. மிரள மிரள விழித்துக்கொண்டிருந்தனர். சற்று நேரத்திற்கெல்லாம், திடீரென்று ஒரு கூட்டம் எங்கிருந்தோ வந்து கோவிலுக்குள் புகுந்தது. அதன் முன்னணியில், அவமானமடைந்த நமது முதல் தீர்த்தக்காரர், இருந்தார். உடனே கோவில் ஒரு அமர்க்களமாய் மாறிவிட்டது. மண்டைகளோடு மண்டைகள் மோதின. கைகளோடு கை கலந்தன. தடிக்கம்புகளோடு தடிக்கம்புகள் உரசின. குடைகளையும், தீவட்டிகளையும், சிலர் தற்காப்பு ஆயுதங்களாக உபயோகித்தனர். கால்மணி நேரத்திற்குப் பின்புதான் அந்தச்சண்டை முடிவடைந்தது. நமது பட்டாச்சார்ய ஸ்வாமிகளுக்கும், மணியகாரருக்கும் பலத்தகாயம். மற்றவர்கள் சிறு காயங்களோடு தப்பித்துக்கொண்டனர். நமது ஹரிஜனப் பையன் விடுவிக்கப்பட்டு முதல் தீர்த்தக்காரரால் மிகவும் அன்பாக அழைத்துக்கொண்டு போகப்பட்டான்.

அவர் அந்தப் பையனுக்குப் பண உதவி செய்து கல்வி கற்பித்து வருவதாகவும், வதந்தி உலாவுகிறது. போகட்டும். அவருக்குத் தீர்த்தம் கிடைக்காததின் பயனாய், அவர் இந்தச்சிறந்த தருமம் செய்ய நேர்ந்ததே! இதற்கெல்லாம் பட்டாச்சார்ய ஸ்வாமிகளே காரணம். நமது முதல் தீர்த்தக்காரருக்கு உதவி செய்த ஹரிஜனங்கள் அவரிடமிருந்து வெகுமதிகள் பெற்றனர்.

முடிவு என்ன? கோவிலுக்கு ஸம்ரோக்ஷணம் செய்யப் பணம் இல்லாமலும், கேசு நடத்த முடியாமலும், கோவில் அதிகாரிகள் தவிக்கின்றனர். சுபம்!

## செட்டியார் கற்பழித்த வழக்கு

### எதிரிக்கு 2½ வருஷக் கடுங்காவல்

புதுக்கோட்டை, செப் 30.

சென்ற வாரம் கிரிமினல் செஷன்ஸ் கோர்ட்டில் கனம் நீதிபதி வி. ராமச்சந்திரய்யர் அவர்கள் முன்பாக நச்சாந்துபட்டி பழனியப்ப செட்டியார் என்பவர் தன்னிடம் வேலைபார்த்து வந்த 11 வயதுள்ள ராஜம்மாள் என்ற பெண்ணை பலாத்காரமாய்க் கற்பழித்ததாகக் கொண்டுவரப்பட்ட வழக்கு விசாரணை நடைபெற்றது. ராஜம்மாளை விசாரிக்கும் காலத்தில் கோர்ட்டு ஹாலில் சம்பந்தப்பட்டவர்களைத் தவிர வேறெவரும் அனுமதிக்கப்படவில்லை. ராஜம்மாள் பிராசிகூஷன் தரப்பு முதல் சாட்சியாக விசாரிக்கப்பட்டாள். பின்னர் லேடி டாக்டர் ஸ்ரீமதி கமலமும் விசாரிக்கப்பட்டார் பின்னர் 9 சாட்சிகள் பிராசிகூஷன் தரப்பில் விசாரிக்கப்பட்டனர். முடிவில் அஸெஸர்களின அபிப்பிராயம் ஒற்றுமையில்லாது மூவர் ஒருவிதமாகவும் ஒருவர் மற்றொரு விதமாகவும் கூறினார்கள். கடைசியில் கனம் நீதிபதி எதிரியைக் குற்றவாளிதானெனக் கண்டு 2½ வருஷக் கடுங்காவலும் ரூ. 250 அபராதமும் அபராதம் கட்டத் தவறினல் மேற்கொண்டு 6 மாதம் கடுங்காவலும் அபராதத்தொகை வசூலானல் மேற்படி தொகையை மேற்படி ராஜம்பாளுக்கு நஷ்ட ஈடாகக் கொடுக்கவேண்டுமென்றும் தீர்ப்புகூறினர். பப்ளிக் பிராசிகூட்டர் ஸ்ரீமான் ஆர். ஸ்ரீநிவாசாச்சாரியர் பிராசிகூஷனுக்கும், வக்கீல் ஸ்ரீமான் வி. ஷண்முகம் செட்டியார் எதிரிக்கும் ஆஜரானர்கள். (தே. ஊ.)

---

## சென்னை ஹைக்கோர்ட்டு

### கோட்டையூர் வருமானவரி வழக்கு

இராமநாதபுரம் ஜில்லாவிலுள்ள கோட்டையூரில் ஒரு சிவன்கோவில் கட்டுவதற்காக ரூபா 42,000 குடும்ப சொத்திலிருந்து கொடுக்கவேண்டியதென நாட்டுக்கோட்டைச் செட்டியார்களின் குடும்பமொன்று தீர்மானம் செய்தது. அதற்காக அந்தக் குடும்பத்தாரில் ஒருவர் உண்டியொன்று ஏற்பாடு செய்தார். கே. வி. எல். ராமநாதன் செட்டியார் என்பவர் அக்குடும்பத்தைச் சேர்ந்தவராதலால் கோலாலம்பூரிலுள்ள தமது ஏஜன்டை தன்னுடைய பங்குப் பணத்தைக் கொடுக்கும்படி உத்தரவிட்டார் ரூ. 14000 கொண்ட இத்தொகையை பிரிட்டிஷ் இந்தியாவுக்குள் கொண்டுவந்ததால் அதற்கு வருமான வரி கொடுக்கவேண்டுமென்று கேட்கப்பட்டது.

இவ்விஷயத்தைப்பற்றி ஹைக்கோர்ட்டின் முந்திய விசாரணையில் உண்டிப் பணம் வசூலிப்பதற்காக சிங்கப்பூருக்கு அனுப்பப்பட்டதென்றும் சிங்கப்பூரிலுள்ள கோவில் தர்மகர்த்தாக்களிடமிருப்பதாகவும் தெரியவந்தது.

தர்மத்துக்காகக் கொடுக்கப்பட்ட இத்தொகை வெளிநாட்டில் கொடுக்கப்பட்டதால் வருமானவரிச் சட்டத்தின் 4 (2)-வது பிரிவின்கீழ் வரிவிதிக்கத் தக்கதென்று நீதிபதிகள் தீர்ப்புக்கூறினர்.

ஸ்ரீமான்கள் பி. ஆர் ஸ்ரீநிவாச சாஸ்திரி வரி விதிக்கப்பட்டவருக்கும், எம். பதஞ்சலி சாஸ்திரிகள் வருமானவரி இலாகா கமிஷனர் சார்பாகவும் வாதித்தனர்.

---

## மதுரை தேவஸ்தான டிரஸ்டி

### திரு. ஆர். எஸ். நாயுடு நியமனம்

மாதம் 300 ரூ. சம்பளத்தில் திரு. ஆர். எஸ். நாயுடு பார்-அட்-லா அவர்கள் மதுரை மீனாட்சியம்மன் கோவிலின் டிரஸ்டியாக 5 வருஷத்திற்கு நியமிக்கப் படடிருக்கிறார்கள்.

## திருச்சி ஜில்லா

### சுயமரியாதை மகாநாடு உடற்பயிற்சி மகாநாடு

இம்மகாநாடுகள் நாளது 1935௵ அக்டோபர்மீ 19, 20-ந் தேதி சனி-ஞாயிறு கிழமைகளில் திருச்சி முனிசிபல் பப்ளிக் ஹாலில் காலை 9 மணிக்கு ஆரம்பமாகும். சுயமரியாதை மகாநாட்டுத் தலைவர் பட்டிவீரன்பட்டி தோழர் W. P. A. சௌந்திரபாண்டியன் அவர்கள் M. L. C. மகாநாட்டுத் திறப்பாளர் கொச்சி "சகோதரன்" ஆசிரியர் தோழர் K. அய்யப்பன் B. A., M. L. C. அவர்கள். மகாநாட்டுக் கொடியேற்றுபவர் ஈரோடு தோழர் E. V. ராமசாமி அவர்கள். உடற்பயிற்சி மகாநாட்டுத் தலைவர் கீழச்சிவற்பட்டி "தமிழ் நாட்டுப் பலவான்" தோழர் லெ. சோமசுந்திரம் அவர்கள். மகாநாட்டுத் திறப்பாளராக சென்னை அரசாங்க முதல் மந்திரி கனம் பொப்லி ராஜா அவர்களையும், மகாநாட்டுக் கொடியேற்றுபவராக ககரைக்குடி முனிசிபல் சேர்மென் தோழர் மெ. செ. மெ. மெ. மெய்யப்ப செட்டியாரவர்களையும் கேட்டுக்கொள்ளப்பட்டிருக்கிறது. மகாநாட்டு பிரதிநிதி கட்டணம் ரூ 1-0-0 இம்மகாநாட்டுக்கு வரும் வெளியூர் பிரதிநிதிகட்கு மட்டுந்தான் சாப்பாட்டு வசதிகளும், இட வசதிகளும் செய்து கொடுக்கப்படும். மகாநாட்டுக்கு வரும் வெளியூர் பிரதிநிதிகள் முன்கூட்டியே தெரிவிப்பது நலமாகும்.

அ. பொன்னம்பலம்,
மகாநாட்டுக்காரியதரிசி.

T. P. வேதாசலம்,
பொக்கிஷதார்.

ஆபீஸ்:— விக்டோரியா ரோடு
உறையூர் P. O. (திருச்சி)

---

## போலீசுக்கு 2000 பட்டதாரிகள்

திருவனந்தபுரம் சமஸ்தானத்தில் போலீஸ் கான்ஸ்டபிள் உத்தியோகத்திற்கு சர்வகலாசாலைப் பரிட்சைகளிற் தேறிய 2000 மாணவர்கள் மனுப்போட்டிருக்கின்றனர். ஆனால் அவர்களில் 33 பேர்கள் தான் தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கின்றனர். இத்தொகையினரில் தாழ்த்தப்பட்டவர் 13; நாயர்கள் 8; கிறிஸ்தவர்கள் 5; முஸ்லிம்கள் 4; பிராமணர்கள்

---

## பாகனேரியில் காந்தி ஜெயந்தி விழா

(ஒரு நிருபர்)

அக்டோபர் 2உ

இன்று பாகனேரியில் மகாத்மா காந்தியடிகளின் பிறந்தினம் ஜவகர் வாசகசாலையின் சார்பில் வெகு சிறப்பாகக் கொண்டாடப்பட்டது. மாலை 6-30 மணிக்கு சி. உ. சுப. பில்லப்ப அம்பலகாரவர்களின் எட்டாந்திருநாள் மண்டபப் படிக் கட்டிடத்திலிருந்து மேளவாத்தியத்துடன் ஊர்வலம் புறப்பட்டது. நன்கு அலங்கரிக்கப்பட்டிருந்த இரதத்தில் காந்தியடிகளின் படம் ரோஜா மலர்மாலை அணிவித்து வைக்கப்பட்டிருந்தது. ஊர்வலம் மோதிலால் சவுக்கிற்கு வந்துசேர்ந்ததும் அங்கு ஒரு பொதுக்கூட்டம் கூடியது. திரு. பெ. பெரி. பழ. காசிவிசுவநாதன் செட்டியார் தலைமைவகித்தார். திரு. கண. மு. மு. சாத்தப்ப செட்டியார், சி. உ. சுப. உடையப்பா, ஆர். வி. சுவாமிநாதன் முதலியவர்கள் மகாத்மா காந்தியடிகளின் ஜீவிய சரித்திரத்தைப் பற்றியும், அவர்கள் நாட்டிற்குச் செய்திருக்கும் அளப்பரிய தியாகத்தைப்பற்றியும், அடிகளின் பெருமையைப்பற்றியும் மிக விரிவாகப் பேசினர்கள். தலைவர் முடிவுரைக்குப் பின் வந்தனோபசாரங் கூறப்பட்டு கூட்டம் முடிவடைந்ததும் ஊர்வலம் மறுபடியும் புறப்பட்டு முக்கிய வீதிகளின் வழியே சென்று எட்டாந்திருவிழா மண்டபப் படிக்கட்டிடத்தில் இரவு 9-30 மணிக்கு முடிவடைந்தது. வந்திருந்தோரனைவருக்கும் வாசகசாலையாரால் பிரசாதம் வழங்கப்பட்டது.









## அபிஸீனியாவின் சரித்திர விபரம்

### தேசமக்களின் குணதிசயங்கள்

### ருசிகரமான சரித்திரச் சான்றுகள்

என்ஸைக்லோபீடியா பிரிட்டானிக்கா போன்ற ஆராய்ச்சி நூல்களில் அபிஸீனியா நாட்டைப்பற்றின தகவல்கள் ஏராளமாய் காணக்கிடைக்கின்றன. இத்தாலியின் பலவந்த ஆக்ரமிப்பும் அதற்கு பிரிட்டன், பிரான்சு போன்ற இதர வல்லரசுகளின் தடையும் ஏற்பட்ட பிறகும் இப்பிரச்னை ஜினிவாவிலுள்ள சர்வதேச சங்கத்தின் மத்யஸ்தத்திற்குக் கொண்டுவரப்பட்ட பின்பும் பத்திரிகை நிருபர்களாலும் வேறு சிரத்வதயுடைய இன வழிகளாலும் நூதனமான பல தகவல்கள் அவ்வப்போது வெளியிடப்படுகின்றன. புராதன சரித்திர சம்பந்தமான விஷயங்கள் நூல்களில் விவரிக்கப்பட்டிருக்கின்றன. அவைகளை சுருக்கித் தொகுத்து வால்குடி திரு. எஸ். சுப்ரமண்யம் என்னும் நிருபர் 'சுதேசமித்திர'னில் பிரசுரித்திருக்கும் ஒரு காபிரைட் வியாசத்தைக் கீழே காண்க.

### எல்லை அமைப்புகள்.

"ஆபிரிக்காவில் அபிஸீனியா இருக்கிறது. அது ஒரு சிறிய ராஜ்யம். அபிசீனியாவுக்கு எதியோப்பியா என்ற வேறு பெயரும் உண்டு. அபிசீனியா வடக்கே நூபியா பிரதேசமும், வடகிழக்கே இதாலிக்குச் சொந்தமான எரிட்ரியாவும், கிழக்கே பிரஞ்சு சோமாலிலாண்டும், பிரிட்டிஷ் சோமாலிலாண்டும், தென் கிழக்கே இத்தாலி சோமாலிலாண்டும், தெற்கே பிரிட்டிஷ் கெனியாவும், மேற்கே எஜிப்தியன் சூடானும் எல்லைகளாக இருக்கின்றன.

அபிஸீனியா ஒரு முக்கோண வடிவமுள்ளது. அபிஸீனியாவின் வட பாகம் மிகவும் குறுகலாகவும் அடிப்பாகம் அகன்றும் இருக்கிறது. வடபாகம் மேற்கிலிருந்து கிழக்கு வரையில் 300 மைல் தூரமும், அடிபாகம் 950 மைல்கள் தூரமும் இருக்கிறது. இதன் விஸ்தீரணம் 350 ஆயிரம் சதுரமைல்கள். ஜனத்தொகை 10 லக்ஷம். இதன் தலைநகரம் அடிஸ் அபாபா. இதன் ஜனத்தொகை 65 ஆயிரம்.

அபிஸீனியா ராஜ்யம் 10 சிறிய ராஜ்யங்களாகவும், 10 மாகாணங்களாகவும் பிரிக்கப்பட்டிருக்கின்றது. சிறிய மாகாணங்களை பிரபுக்கள் பரிபாலித்து வருகிறார்கள். சிறிய ராஜ்யங்களை பரம்பரையாய் வரும் அதிகாரிகள் அரசாண்டு வருகிறார்கள். இவர்களுக்கு "ராஸ்" என்ற பட்டம் கொடுக்கப்பட்டிருக்கிறது.

இந்த அதிபதிகளான "ராஸ்"களும், பிரபுக்களும் [illegible]க்குரிய அதிகாரங்களையுடையவர்கள். இவர்களிடம் படைகள் உண்டு. இவர்கள் சண்டை சமயங்களில் சக்கரவர்த்திக்கு உதவி செய்வார்கள். இவர்கள் எல்லோருக்கும் தலைவர் சக்கரவர்த்தியாவார் இவருக்கு ராஜாதிராஜா எதியோப்பிய சக்கரவர்த்தி என்று பெயர்.

### பூர்வ சரித்திரம்

அபிஸீனியர்களின் சரித்திரம் புராதனமானது. அவர்களுடைய சரித்திரம் கிறிஸ்து பிறப்பதற்குப்பலநூற்றூண்டுகளுக்கு முன் ஆரம்பமாகிறது. அபிஸீனியர்களையும் ஆசியாக்காரர்களையும் சரித்திரக்காரர்கள் "கருப்பு மனிதர்கள்" என்று அழைத்துவருகிறார்கள். அராபியாவிலிருந்து ஆப்பிரிக்காவுக்கு குடியேறிய 'ஹபாஷா' அல்லது அதஷியர்என்றவகுப்பினர்களே இன்று அபிசீனியர்கள் என்று சரித்திரக்காரர்கள் கூறுகிறார்கள். ஆனல் இன்று அபிசீனியர்கள் தங்கள் ராஜ்யத்தை எதியோப்பியா என்றும், தங்களை எதியோப்பியர்களென்றும் அழைத்துக்கொள்ளுகிறார்கள். இந்த எதியோப்பியா என்ற பெயரை முதலில் யார் கொடுத்தார்களென்று இன்று ஒருவராலும் கூறமுடியாது. சிரியர்கள் கிரேக்க பாஷையிலிருந்த வேத புத்தகத்தை ஒருவித பாஷைக்கு மொழி பெயர்த்தபொழுது அந்த பாஷையை 'எதோபிக்' என்று அழைத்தார்களாம். அந்த வேத புத்தகத்தை அனுஷ்டிப்பவர்கள் எதியோப்பியர்களாகும். ஹபாஷா நாளடைவில் ஹபிஷ்னியா (அபிசீனியா) ஆயிற்று. இன்னும் சரித்திரப் புத்தகங்களிலும் பூகோளப் படங்களிலும், அபிசீனியா அரசாங்கத்திலும் அபிசீனியாவுக்கு எதியோப்பியா என்ற மற்றொரு பெயரும் கொடுக்கப்பட்டிருக்கின்றது.

அபிசீனியாவில் புராதனமான சின்னங்களோ கல்வெட்டுகளோ கிடையா. அக்ஸம் என்றவிடத்தில் கட்டப்பட்ட ஒரு மாகோவிலும் கொண்டார் என்றவிடத்தில் கட்டப்பட்ட ஒரு பழைய கோட்டையுமே புராதனச் சின்னங்களாகவிருக்கின்றன. கிறிஸ்து பிறப்பதற்கு முன் அபிசீனியாவை அரசாண்ட அரசர்களின் சரியான பெயர் கிடைக்கவில்லை. ஒரு சில நாணயங்களைக் கொண்டுதான் சில பெயர்கள் இன்று நிச்சயிக்கப்படுகிறது. அபிசீனியாவின் சரித்திரம் சரிவர எழுதப்படவில்லை. இங்கிலாந்திலும் பாரிசிலும் உள்ள தேசிய புத்தகசாலையிலிருக்கிற சுவடிகளைக் கொண்டே இன்று அபிசீனியாவின் சரித்திரம் எழுதப்பட்டிருக்கிறது.

### அரச வம்சம்.

அபிசீனியாவின் முதலாவது அரசர் எய்தபஸ் என்பவர். இவர் ஹாமின் புதல்வர். டேவிட் பிள்ளையான சாலமன் வம்சத்தில் பிறந்தவர்களே அபிசீனியாவைத் தொடர்ந்து அரசாண்டு வந்திருக்கிறார்கள் என்று சிலர் கூறுகிறார்கள். கிறிஸ்துவுக்கு முன் 970-ல் சாலமன் அரசாண்ட பொழுது அரேபியாவிலிருந்து 'ஹபிஷ்' என்ற ஜாதியினர்கள் அபிசீனியாவுக்கு வந்து நாகரீகத்தைப் புகுத்தினர்கள். சாலமன் அபிசீனியாவில் 'அக்ஸம்' என்ற பிரதேசத்தை ஸ்தாபித்தார்.

ஏ. டி. 1270-1285ல் அரசாண்ட ராஜாதி ராஜன் இகினே அமலக் அபிசீனியாவில் பல சீர்திருத்தங்கள் செய்தார். இவர் காலத்தில் தாமஸ் என்பவரும் பிருமண்டிஸ் என்பவரும் அபிசீனியாவில் கிறிஸ்துவ மதத்தைப் பரப்பினர்கள். கிறிஸ்து பிறப்பதற்கு முன் அபிசீனியாவை 165 அரசர்கள் அரசாண்டிருப்பதாகக் கணக்கிடப் பட்டிருக்கிறது.

கிறிஸ்துவுக்குப் பின் கணக்கற்ற அரசர்கள் அரசாண்டு வந்திருக்கிறார்கள். இந்த அரசர்கள் அரசாண்ட சமயத்தில் அபிசினியா ராஜ்யம் நைல் பிரதேசத்திலிருந்து செங்கடல் வரையில் பரவியிருந்தது. வடக்கே நையியாவிலிருந்து தெற்கே நாடிமண்டலம் வரையில் இருந்தது. ஆனல், இப்பொழுது அபிசினியாவுக்குக் கடலுக்கருகில் ஒரு இடமும் கிடையாது. அவ்வப்பொழுது ஏற்படும படையெடுப்பினல் பல இடங்களை அவர்கள் இழந்துவிட்டார்கள். அத்துடன் ஐரோப்பியர்கள் ஆபிரிக்காவுக்கு வந்து வியாபாரம் செய்ய வந்தபொழுது அபிஸீனியர்கள் அவர்களுக்கு உதவி செய்தார்கள். ஸ்பானியர்கள், ரஷியர்கள் போர்ச்சுகீசியர்கள், இதாலியர்கள், பிரஞ்சுக்காரர்கள், வெள்ளைக்காரர், இவர்களுக்கு அபிசீனியா இடம் கொடுத்தது. போட்டா போட்டியினல் ஐரோப்பியர்களுக்குள் சண்டை ஏற்பட்டு ஒரு சிலர் தங்களது பிரதேசங்களை இழந்துவிட்டார்கள். இன்று பிரிட்டிஷ்காரர்களும் பிரஞ்சுக்காரர்களும் இத்தாலியர்களும் அபிஸீனியா ராஜ்யத்தினருகிலிருக்கிறார்கள்.

### தலைநகரம்

அபிசீனியாவுக்கு அக்ஸம் தலைநகராகச் சிறிதுகாலம் இருந்தது ஆனல் டைடு என்ற அரசி ஸ்தாபித்த அடிஸ் அபாபாவே பின்னர் தலை நகரமாய் ஏற்படுத்தப்பட்டது.

அபிசீனியாவை அரசாண்ட அரசர்களின் பெயர்கள் சரிவரச் சரித்திரக் காரர்களுக்குக் கிடைக்கவில்லை. முக்கியமாக மெனிலக் அரசர் காலத்திலிருந்து அபிசீ

12-ம் பக்கம் பார்க்க









Best copy available.

## நோட்டீஸ்

தேவகோட்டை
சப் கோர்ட்டு

1935 ஞ O. S. No. 162
1935 ஞ I. A. No. 517

பசுபதி அய்யர் — வாதி

(1) M. L. RM. லெக்ஷ்மணன் செட்டியார்
(2) M. M. P. L. சொக்கலிங்கம் செட்டியார்
(3) அலமேலு ஆச்சி
} பிரதிவாதிகள்.

ஷை நம்பர் வாதி தனக்காகவும், 2, 3 பிரதி வாதிகளின் கிரெடிட்டர்களுக்காகவும், ஷை நம்பரில் 1-ம் பிரதிவாதி 2, 3 பிரதிவாதிகள் பேரில் தேவகோட்டை சப்கோர்ட்டில் 1929-ஞ O. S. No. 115-ல் பெற்றிருக்கும் டிக்கிரி Collusive and Fraudulent என்றும் அது void என்று டிக்ளேர் செய்யவும் ஷை டிக்கிரியை 1-ம் பிரதிவாதி ஷை டிக்ரியில் கண்டிருக்கும் சொத்துக்களின் பேரில் நிறைவேற்றக் கூடாதென்று இஞ்ஜங்ஷன் பெறவும் இதர பரிகாரங்களுட் கோரி ஷை பிரது தாக்கல் செய்திருப்பதில் ஷை I. A. 517 of 1935ல் ஷை 2, 3 பிரதிவாதிகளின் கிரெடிட்டர்களுக்காக வாதிக்கு தாவா பிரது தாக்கல்செய்து மேல் நடத்த அனுமதி கோரியிருப்பதில் ஷை மனுவில் கோட்டீசு உத்திரவாகி 24—10—1935-ல் வாயிதா ஏற்பட்டிருக்கிறது ஷை மனுவுக்கு ஆக்ஷேபணையுள்ளவர்கள் நேரிலாவது வக்கீல் மூலமாவது அன்று பகல் 10-மணிக்கு ஆஜராகித் தெரிவித்துக் கொள்ளலாம்.

P S. கிருஷ்ணசாமி அய்யர்,
தேவகோட்டை 7—10—35 } வாதிவக்கீல்.

---

சொர்னவல்லி நாவல்
விலை ரூ 1—0—0
(தபாற்செலவு வேறு)
மானேஜர்,
குமரன், காரைக்குடி.

---

## நோட்டீஸ்

தேவகோட்டை
சப் கோர்ட்டு

I. P. 9. of 34.

பெ. அழ. பழ. அழகம்மை ஆச்சி } மனுதார்

R. M. N. R. M. காருபண்ணன் செட்டியார் } எதிர் மனுதார்

மனுதார் எதிர்மனுதாரை இன்சால்வெண்டாக்கவேணுமென்று மனுச்செய்து தாவா மனுவும் 12—10—35க்கு வாய்தா போடப்பட்டிருக்கிறது.

T. R. Parthasarathy Iyengar,
Vakil.
Devakotti.
27—9—35.

---

# மலாய் நாட்டுச் செய்திகள்.

(நமது நிருபர் ஏர்மெயில்.)

### ரப்பர் ஏற்றுமதி

மலாய் நாட்டிலிருந்து வெளிதேசங்கட்கு 1935 ஆகஸ்டு மாதத்தில் 51,873 டன் ஏற்றுமதியாகியிருக்கிறது. 1935 ஜனவரி முதல் ஆகஸ்டு வரை எட்டு மாதங்களில் ஏற்றுமதியான ரப்பரின் மொத்தம் டன் 409,829. 1934-ல் இதே எட்டுமாதங்களில் ஏற்றுமதியானது 458,550 டன்.

1935 ஆகஸ்டு மாதத்தில் மட்டுமுள்ள ஏற்றுமதியின் தேசவாரியான விபரம் வருமாறு:—

| | |
|---|---|
| பிரிட்டிஷ் சாம்ராஜ்யம் | 11,703 டன் |
| அமெரிக்கா | 27,092 ,, |
| ஜரோப்பாவிலுள்ள மற்ற தேசங்கள் | 8,282 ,, |
| ஜப்பான் | 2,772 ,, |
| மற்ற தேசங்கள் | 2,024 ,, |
| மொத்தம் | 51,873. |

### கோலாலம்பூரில் சானிட்டரி போர்டு வருமானம்

1934-ம் வருடத்தில் கோலாலம்பூர் சானட்டரி போர்டு சார்பாக முனிசிபல் ரெவினியூ 1153000 வெள்ளியும், சுக்கைகள் மூலமாய் 580270 வெள்ளியும், தண்ணீர் சுக்கை, கல்வி வரி, எலெக்ட்ரிக் வரி முதலியவைகள் மூலம் 1161200 வெள்ளியும், மொத்தம் 2314200 வெள்ளி வருமானம் கிடைத்ததாயும், மொத்தச் செலவு ரிங்கி 743400 மட்டும்தான் என்றும் சொல்லப்படுகிறது.

### ரப்பர் விலை. சிங்கப்பூர்

| | | | |
|---|---|---|---|
| ஸெப். | 25உ | $ | 26—17 |
| | 26உ | ,, | 25—67 |
| | 27உ | ,, | 25—83 |
| | 28உ | ,, | 25—50 |
| | 30உ | ,, | 25—67 |
| | அக்டோபர் 1உ | ,, | 26—00 |

### பினங்கு செட்டியார்கள் சங்கம்

இரண்டாவது வருட நான்காவது நிர்வாகசபைக் கூட்டத்தின் நிகழ்ச்சி:—

நிகழும் யுவ வருடம் புரட்டாசி மாதம் 7உ 23-9-35 திங்கட்கிழமை மாலை 5 மணிக்கு கூட்டம் சங்கக் கட்டிடத்தில் தலைவர் திரு. மெ. ராம. அ. அண்ணாமலை செட்டியார் அவர்கள் தலைமையில் நடைபெற்றது. 12 அங்கத்தினர்கள் விஜயம் செய்திருந்தார்கள். பின்கண்ட தீர்மானங்கள் நிறைவேறின:—

இரண்டாவது வருட 3-வது நிர்வாக சபைக்கூட்டத்தின் நிகழ்ச்சிகளை வாசித்துக் காண்பிக்கப்பட்டு தலைவர் கைபெழுத்து வாங்கப்பெற்றது. சங்கத்திற்கு வந்திருக்கும் லெட்டர்களையும், அறிக்கைகளையும் வாசித்துக் காண்பிக்கப்பெற்று ரிகார்டு செய்யப்பெற்றது திரு. சா. நா. சா. சொ. நாச்சியப்ப செட்டியார் அவர்கள் தாய்நாடு செல்வதை முன்னிட்டு எழுதிய ராஜீநாமா லெட்டர் அங்கீகரிக்கப்பெற்றது. பினங்கு 111, 126. கிர் கிட்டங்கியில் காலியான நிர்வாகசபை அங்கத்தினர் பதவிக்கு முறையே திரு. சு. சே. வயி. கருப்பஞ் செட்டியார், திரு. சா. நா. சா. சொ சொக்கலிங்கம் செட்டியார் அவர்களை தேர்ந்தெடுக்கப்பெற்றது. பினங்கு ஆ. சொ. கடையிலிருந்து 22-9-35உ வந்த லெட்டரைப்பற்றி விவாதிக்கப்பட்டு கீழ்க்கண்டபடி ஏகமனதாகத் தீர்மானிக்கப்பெற்றது. மேற்படி கடைக்கு அவர்கள் அனுப்பிய வருட சந்தா நி. 12/- பெற்றுக்கொண்டதே சரியென்று தீர்மானிக்கப்பெற்றது. யுவ வருடம் ஆவணி மாதம் 31 வரையிலுள்ள சங்க வரவு செலவுக் கணக்குகள் வாசித்துக் காண்பிக்கப்பெற்று அங்கீகரிக்கப்பெற்றது. பினங்கு இந்திய சங்கத்தின் ஆதரவில் நடக்கும் தமிழ்ப் பள்ளிக்கூடத்திற்கு நமது சங்கம் தற்பொழுது பொருள் உதவும் தன்மையில் இல்லை என்பதை தெரிவித்துக்கொள்வதெனத் தீர்மானிக்கப்பெற்றது. காரியதரிசியால் வந்தனோபசாரங்கூறப்பெற்று 6 மணிக்கு கூட்டம் இனிது நிறைவேறியது.





# திரு F. G. நடேசய்யர்

## பதவியினின்றும் விலகுகிருர்

தென்னிந்திய ரயில்வே கம்பெனியின் பப்ளிஸிடி & காட்ரிங் அதிகாரியான திரு. F. G. நடேசய்யர் அவர்கள் தனது 35வருஷகால சர்விசிலிருந்து 1—10—35யன்று லீவ் பெற்றுக்கொண்டு ரிட்டயர் ஆனூர்.

நண்பர் திரு. நடேசய்யரவர்கள் 1886-ம் வருஷம் நவம்பர்மீ புதுக்கோட்டையில் ஜனனமானூர். காலஞ்சென்ற திரு. T. கங்காதர சாஸ்திரிகள் இவருடைய தகப்பனூர். அவர் தகப்பனூர் புதுக்கோட்டை தர்பாருக்கு சட்டயோசனை சொல்லுபவராகவும் ஸ்டேட் வக்கீலாகவும் இருந்தார். இவருடைய பாட்டனூர் திருவாலங்காடு காலஞ்சென்ற திரு தியாகராஜ சாஸ்திரிகள். இவர் சங்கீதத்திலும் வீணையிலும் சாஸ்திரத்திலும் மிக்க கியாதிவாய்ந்தவர்.

திரு. F. G. நடேசய்யாவர்கள் (இவரது நண்பர்கள் அன்பு மிகுதியால் F. G. என்றே அழைப்பர்) புதுக்கோட்டை மகாராஜா கல்லூரியிலும்; நாகப்பட்டணம் வெஸ்லியன் கல்லூரியிலும், திருச்சி செயின்ட் ஜோஸப் கல்லூரியிலும் கல்வி பயின்றூர். தென்னிந்திய ரயில்வேயில் முதன் முதலில் சம்பளமில்லாமல் உத்தியோகம் பார்த்து வந்தார். திருவாங்கூர், பாம்பன் கிளை ரயில்வேக்களின் ஆரம்ப காலத்தில் தற்காலிகமாக குமாஸ்தா வேலை பார்த்து வந்தார். அவ்வேலைகள் முடிந்தவுடன் ஜெனரல் டிராபிக் மானேஜரின் போக்குவரத்து இலாகாவில் ரூ 35 சம்பளத்தில் குமாஸ்தாவாக வேலை பார்த்து வந்தார். அதிலிருந்து தனது உண்மையான ஊழியத்தால் நன்மதிப்புடன் பொறுப்புள்ள ஆபீஸ் சூப்பரின்டெண்ட் வேலைக்கு ரூ. 360 சம்பளத்தில் அவர் உயர்த்தப்பட்டார். சென்னை அஸிஸ்டெண்டு டிராபிக் சூப்பரின்டெண்டாக 1926-ம் வருஷம் நியமிக்கப்பெற்று சமீபத்தில் ஜில்லா டிராபிக் சூப்பரின்டெண்டாக உயர்த்தப்பட்டார். அவர் தென்னிந்திய ரயில்வேயில் எல்லா ஜில்லாக்களிலும் வேலை பார்த்து ஒரு வருஷமாக தனது சக்தியினுல் விளம்பர அதிகாரியாக வேலை பார்த்து வந்தார். எல்லா வகையிலும் அவர் காண்பித்த அபிவிருத்திகளால் பொது மக்களிடமும் ரயில்வே மேல் அதிகாரிகளிடமும் நன்மதிப்பு பெற்ருர்.

விளம்பர இலாக்காவில் ஒரு பெரிய ஸ்தானம் வகித்து பிரயாணம் செய்யும் பொது மக்களுக்கு அவர் செய்துள்ள விசேஷ வசதிகள் அவருடைய உண்மையான ஊழியத்தைக் காட்டுகின்றன. சமீபத்தில் நடந்த இந்துக்களுக்கு மகா முக்யமான "அர்த்தோதயம்" புண்ய காலத்தில் அவர் விளம்பர அதிகாரியாய் இருந்து கொண்டு அநேக துண்டுப் பிரசுரங்கள், சுவரொட்டித் தாள்கள், புஸ்தகங்கள் முதலியவை வெளியிட்டு விளம்பரம் செய்தது ஜனங்களுக்குப் பேருதவியாயிருந்தது. அவர் தனிப்பட்ட வாழ்க்கையில் கலந்து கொண்டு செய்த சேவைகள் பல. இந்திய, ஐரோப்பியர்களுக்குள் ஓர் சிறந்த நண்பர். இவர் ஒரு சிறந்த நடிகர். இருபது வருஷமாக உள்ளூரிலுள்ள "ரஸிகரஞ்சன சபை"யில் காரியதரிசியாக இருந்துவருகிருர். சென்னை "சுகுண விலாச" சபையிலும் இவர் ஒரு அங்கத்தவர். இந்திய நாடகக் கலைக்கு தன்னுல் முடிந்த ஊழியத்தைச் செய்திருக்கிருர். 1914ம் வருடத்தில் அகில இந்திய காங்கிரஸ் கமிட்டிக்கு அங்கத்தினராயிருந்து ரயில்வே மேல் அதிகாரிகள் யோசனைப் பிரகாரம் அந்த ஸ்தானத்தை ராஜினாமாச் செய்தார். 1920ம் வருஷத்தில் திருச்சி ஜில்லா ஸ்கவுட் கமிஷனராக இருந்தார். 12 வருஷகாலமாக திருச்சி முனிஸிபாலிட்டியில் மெம்பராகஇருந்துகொண்டும் 1923-1924 வருஷத்தில் முனிஸிபல் சேர்மெனுக இருந்தும் பொதுமக்கட்கு அவர், செய்துள்ள ஊழியம் போற்றத்தக்கது. திருச்சி நகரத்தில் விசேஷ சுகாதார வசதிகளை உண்பெண்ணியிருக்கிருர். நகர் முழுமையும் ஜல சவுகரியத்தை உண்டு பண்ணியிருக்கிருர். மின்சார விளக்கு ஏற்படுமுன் நகரில் மூலை முடுக்குகளிலெல்லாம் காஸ்லைட்களைப் போட்டு பொதுமக்கட்கு மிக்க சௌகரியத்தை ஏற்படுத்தினுர்.

விளம்பர இலாக்கா உத்தியோகஸ்தர்கள் 1-10-35 ல் திரு. நடேசய்யாவர்களுக்கு பிரிவு உபசார விருந்து ஒன்று நடத்தினர்கள். அப்பொழுது தனக்கு உதவியாக இருந்து தொண்டாற்றிய சகபாடிகளுக்கு தான் நன்றி செலுத்துவதாகவும் அவர்களை விட்டுப் பிரிவது தனக்கு வருத்தத்தைத் தருகிறது என்றும் அய்யாவர்கள் குறிப்பிட்டார்கள்.

எனவே இப்பெரியாருக்கு நீண்ட ஆயுளும், திடகாத்திரமும் ஏற்படும்படியும் எதிர்காலத்தில் தமது வாழ்க்கையைப்பொது ஊழியத்தில் ஈடுபெறச் செய்வாரென்றும் நம்புகிருேம்.

திரு. சேஷகிரி ராவ் அவர்கள் திரு. அய்யர் அவர்களது ஸ்தானத்தை ஏற்றுக்கொண்டு வேலைபார்த்து வருகிருர்கள்.

குமரன்

காரைக்குடி
யுவ-ஹு புரட்டாசி-மீ 24உ

## முக்காடு தீர்ந்தது

முந்தின காலத்து மக்கள் ஒருவரை யொருவர் அடக்கியே வாழ முயன்றிருக்கின்றனர். இன்றும் அந்த மனப்பான்மை பெரும்பாலாக ஒழிந்துவிடவில்லை யென்றாலும் அடக்கு முறையினால் ஏற்பட்டுள்ள துன்ப வாழ்க்கையின் பயன் அனுபவ பூர்வமாக விளங்கி வருகிறது. அடிமைப்பட்டுக் கிடக்கும் கூட்டத்திற்கு உரிமை வழங்க வேண்டுமென்ற எண்ணம் பெரும்பான்மை அபிப்பிராயமாகி வருவதைக் காண்கிறோம். ஒரு ஜாதியாரை மற்ற ஜாதியார் அடக்கி அடிமை கொண்டிருப்பதைப் போலவே ஆண் ஜாதியார் பெண் ஜாதியாரை அடக்கி யொடுக்கி அடிமை கொண்டுள்ளனர். பெண் மக்களை அடக்கி ஒடுக்கி வீட்டினுள் மடக்கி வைத்தால்தான் தர்மம் தலைதப்பிப் பிழைக்குமென்று பழையவர்கள் கருதினார்கள்.

சீன தேசமக்கள் பெண்மக்களின் காலை ஒடித்து மேல்வீட்டில் போட்டு அடைத்துவைத்தனர். பல சந்தர்ப்பத்தில் வீடுகளில் தீப்பிடித்த போது மேலிருந்த பெண்கள் கீழே இறங்க முடியாமல் நெருப்புக் கிரையாகி மாண்டனர். அந்த மூடப்பழக்கம் இப்போது அடியோடு நின்றுவிட்டது. அப்படியே முகமதியர் முக்காடு போடும் வழக்கத்தைக் கையாளத்துவங்கினர். பெண்ணினது உருவமே தெரியாமல் தலை முதல் கால்வரை ஒரேயடியாகத் துணியைப் போட்டுச் சுற்றி பெண்ணைப் பார்சல் செய்து வைக்கின்றனர். ஹிந்துக்கள் கற்பைக்காக்கிறோமென்று செய்திருக்கும் அடிமைத்தனம் சொல்லிமுடியாது. யார் எதைச் செய்தாலும் பெண் மக்களது கற்பு ஆண் மக்களால் களவாடப்படுவது எங்கும் நிற்கவில்லை. கோடிக்கணக்கான திருடர்கள் கட்டுக்கடங்காமல் திரிகின்றனர். அவர்களே நகைப்பெட்டி பத்திரமாக இருக்கட்டுமென்று பறைசாற்றுகிற மாதிரி ஆண் மக்கள் விபசார நோக்கத்தை வயிறு நிறைய வைத்துக் கொண்டு பெண் மக்களைக் "கற்பைக் காத்துக் கொள்ளுங்கள்" என்று கூறுவதும் அதற்கு விதிகள் செய்வதும் நகைப்பிற்கிடமாகஇருக்கவில்லையா? இந்தக் கட்டுப்பாடுகள் வீண் என்று அனுபவத்திலேயே வெட்ட வெளிச்சமாகி விட்டது. கல்வி கொடுத்தால் கற்புக் கெடுவார்களென்ற எண்ணம் சிதற அடிக்கப்பட்டது.

ஹிந்துக்களின் பிடிவாதத்தைக் காட்டிலும் முகமதியர்களின் பிடிவாதம் உறுதியுள்ளதென்று கூறவேண்டியதில்லை. சிறந்த முகமதிய நாடான பர்சியாவில் பெண்கள் முக்காட்டை நீக்கி விட்டார்களென்ற செய்தி கிடைத்துள்ளது. அங்கே பெண்களுக்குள் விழிப்பேற்பட்டு விட்டது. பர்ஸிய இளவரசிகள் முக்காட்டைக் களைந்து விட்டு மலர்ந்த முகத்துடன் பெரிய கூட்டத்தில் தோன்றினாராம். அவ்வழியை மற்றவரும் பின்பற்றிவிட்டனர். அக்கூட்டத்தில் ஒருபிரசங்கியார் பேசியதன் முக்கிய சாரம் வருமாறு:—

"தெஹ்ரானின் (பர்ஷியா தலைநகரின்) பெண்கள், பழைய பர்தா வழக்கத்துக்கு விடுமுறை கொடுத்தனுப்பி விட்டது போற்றத்தக்கதாகும். எல்லா பொதுஇடங்களுக்கும் பர்ஷியப் பெண்கள், ஆண்களைப்போல் சகஜமாகச் செல்கின்றார்கள். ஆண்பாலர் புரியும் பொதுக் காரியங்களில் நம் பெண்களும் பரஸ்பரம்கூடிபட்டுசமத்துவமாய் வேலைசெய்து வருகின்றார்கள். இவ்வெல்லாம், நம் ஈரானியப் பெண்களின் விழிப்புக்கும், முன்னேற்றத்துக்கும் அத்தாக்ஷிகளாகும். பர்தா முறை ஒழிப்பு நல்ல சந்தர்ப்பத்தில்ஏற்பட்டது. பர்ஷியப் பெண்களின் பர்தா முறை ஒழிப்புக்கு முதற்பெரும் காரணபூதர், பர்ஷிய ஷாவின் புதல்விகளான இளவரசிகள் தான் என்பது நமக்குப் பெருமையாகும். அரசர் தர்பார் நடத்த சிம்மாசன மேறியபோது, அவரது இளவரசிகளும் பர்தாவையும் முக மூடியையும் களைந்தெறிந்துவிட்டு, தர்பாரில் பகிரங்கமானார்கள். அதற்கடுத்த மறுநாளே, பர்ஷியாவின் இதர பெண் பிரமுகர் யாவரும் கோஷாவை ஒழித்து வெளிவரலாயினர்..."

இதனை ஊன்றிநோக்குங்கள். பெண்களின் அறிவைமழுக்கி மிருகங்களாக்கி வைத்துக்கொண்டு கடிக்கிறதே குலைக்கிறதே என்று வருந்துவதால் என்ன பயன்? பெண்களுக்கு அறிவைக் கொடுங்கள். நாகரீகமாக்குங்கள். அவர்களால் இன்பத்தை அடையலாம். இன்பந்தரும் பெண்ணைத் துன்பப் பொருளாக்கி அதை அனுபவிப்பானேன்? பர்ஸிய மாதரைப் போல் இக்காட்டுப் பெண்கள் மூடக் கட்டுகளை வெட்டியெறிந்து வெளிவர முயலட்டும்.

---

## தேவகோட்டை பஞ்சாயத்து போர்டு

### அப்பீலில் ஜனக்கட்சிக்கு சாதகம்

தேவகோட்டை பஞ்சாயத்துப் போர்டுக்குச் சென்ற வருடம் நடந்த தேர்தல் நடவடிக்கை பகிரங்கப்படுத்தப்படவில்லையென்றும் அதிகாரம் வகித்துவந்த கக்ஷியினர் இரகசியமாக நடத்திவிட்டார்கள் என்றும் புகார் கூறி ஜனக்கட்சியினர் சர்க்காருக்கு விண்ணப்பங்கள் அனுப்பியும் ஜில்லா முன்சிப் கோர்ட்டில் எலக்ஷன் பெட்டிஷன்கள் தாக்கல் செய்துமிருந்தார்கள். ஜில்லா முன்சிப் கோர்ட்டார், நடத்தப்பட்டதாக கூறப்படும் எலக்ஷன் செல்லாதென்று தீர்ப்புக்கொடுத்தார்கள். அதிகாரம் வகித்துவந்த கக்ஷியினர் சென்னை ஐக்கோர்டில் ஷை ஜில்லா முன்சிப் தீர்ப்பை ஆட்சேபித்து வழக்கு தாக்கல் செய்தார்கள். ஐக்கோர்ட்டாரும் ஜனக்கட்சியினருக்கு சாதகமாக ஜில்லா முன்சிப் கொடுத்த தீர்ப்பில் தலையிட முடியாதென்று கூறிவிட்டார்கள். ஆகையால் இனி புது எலக்ஷன் நடக்கவேண்டியதிருக்கிறது.

---

### நகரத்தாருக்கு வர்த்தக ஸ்தானம்

சென்னை சர்க்காரின் தொகுதிநிர்ணய சம்பந்தமான சிபார்சில் நாட்டுகோட்டை நகரத்தார் சங்கத்திற்கு வர்த்தகத் தொகுதியில் ஒரு ஸ்தானம் வழங்குவதெனக் குறிப்பிட்டுள்ளனர்.

## ஷஷ்டியப்தபூர்த்தி

காரைக்குடி முத்துப்பட்டினம் திருவாளர் அ. ராம. நா. (மாயவரம்) சிதம்பரம் செட்டியாரவர்கட்கு புரட்டாசி 20-ந் தேதியன்று அறுபதாம் ஆண்டு ஷஷ்டியப்தபூர்த்தி மிகச்சிறப்பாக நடைபெற்றது. உள்ளூர் வெளியூர்களிலிருந்து சுமார் 800 நகரத்தார் கனவான்கள் விஜயம் செய்திருந்தனர். மாயவரம் கும்பகோணம் வகையரு ஊர்களிலிருந்து சுமார் 100 பிரமுகர்கள் வந்திருந்தனர். அறுசுவை யுணவு விருந்தும் விசாரணையும் திறம்பட நடைபெற்றன. முத்துப்பட்டணம் துவாதசி மடத்தில் ஏராளமான பிராமணர்களுக்கு போஜனம் செய்விக்கப்பட்டது. பருப்பூரணிக்கரையில் புதிதாகக் கொட்டகை அமைத்து சுமார் 1500 பேருக்கு உணவளிக்கப்பெற்றது. தேவகோட்டை வக்கீல்கள் பலர் வந்திருந்தனர். சாந்தி காரியங்கள் தாராளமான பணச்செலவில் விமரிசையாக நடைபெற்றது ஏராளமான சுற்றத்தார்களும் பங்காளிகளும் நண்பர்களுமிருந்து மிகச்சிறப்புடன் நடத்தினார்கள்.

---

## ரிஷிவாலி ஸ்கூல்

### மாணவர்களின் செட்டிநாட்டு விஜயம்

மதனப்பள்ளி ரிஷிவாலி ஸ்கூலைச்சேர்ந்த 27 பேர்கொண்ட மாணவர் கோஷ்டியொன்று 2—9—35 இரவு காரைக்குடி ரயில்வே ஸ்டேஷனில் இறங்கி அமராவதிபுதூர் சென்று ஸ்ரீமான் பெ. இராமநாதன் செட்டியாரின் விருந்தினராக இருந்தார்கள். அங்கு காந்தி பாடசாலையையும், திரு பிச்சப்பா வீட்டையும் திரு சொ. முருகப்பா அவர்கள் வீட்டையும் குழந்தைகள் பார்த்தார்கள். 3உ தேவகோட்டைக்குச் சென்று ஸ்ரீமான் சேவு. லெ. ராம. நாராயணன் செட்டியார் அவர்கள் வீட்டில் தங்கினார்கள். தேவகோட்டை ஜமீன்தார் அவர்கள் வீட்டைப் பார்த்தார்கள். சொர்ணமூர்த்தி பெண் பாடசாலைக்குச் சென்று பார்வையிட்டனர். 4-ந் தேதி கானாடுகாத்தானுக்கு வந்தார்கள். க. வெ. ராம. குடும்பத்தாரின் விருந்தினராகக் குழந்தைகள் இருந்தனர். 5உ காலை செட்டிநாடு கனம் ராஜா சர் அண்ணாமலை செட்டியார் அவர்களின் அரண்மனை முதலிய பல இடங்களுக்கும் சென்றனர். ஸ்ரீமான் க.வெ.சித. வெங்கடாசலம் செட்டியார் அவர்கள், குழந்தைகளுக்கு வெகு பட்சத்தோடு அரண்மனையின் அத்தனை பாகங்களையும் காண்பித்தார்கள். குழந்தைகளுக்குப் பழமும்பானமும்கொடுக்கப்பெற்றன. பிறகு பெரியகோவிலுக்குச் சென்றனர். அன்று மாலை 4மணி மெயிலில் வெகு உத்ஸாகமாக குழந்தைகள் புதுக்கோட்டைக்குப் பிரயாணமானார்கள். கூடஇருந்து திரு. பிச்சப்பா, சுப்பிரமணியன் வழி அனுப்பிவைத்தார்கள்.

---

## கோவாபரேட்டிவ் பாங்கு

காரைக்குடி, அக். 5உ

ஷை பாங்கின் மஹா சபை மீட்டிங் 1935-ம் வருஷம் அக்டோபர் மாதம் 5-ந் தேதி சனிக்கிழமை மாலை 6 மணிக்கு பிரஸிடெண்ட மகா-ள-ள-ஸ்ரீ சு. ராம. மெ. சோமசுந்தரம் செட்டியாரவர்களின் தலைமையின் கீழ் நடைபெற்றது. அவ்வமயம் 48 மெம்பர்கள் ஆஜராயிருந்தனர்.

29-9-35-ந்தேதிய, திருச்சியிலிருந்து வெளியாகும், மதுரமித்திரன் பேப்பரில் இந்த பாங்கைப்பற்றி எழுதியிருக்கும் கட்டுரை படிக்கப்பட்டது.

மதுர மித்திரன் பத்திரிகையில் இந்த பாங்கைப்பற்றியும், பொக்கிஷதார் மகா-ள-ள-ஸ்ரீ N. S. வெங்கிட்டராம அய்யர் M. A. L. T. அவர்களைப்பற்றியும் இதர டைரக்டர்களைப்பற்றியும் குமாஸ்தாக்களைப்பற்றியும் எழுதியிருக்கும் விஷயங்கள் உண்மைக்கு விரோதமாயிருக்கிறதென்றும், இந்த பாங்கின் நிர்வாகமானது ஒழுங்காக நடைபெற்று வருகிறதென்றும் இந்த மகாசபையார் அபிப்பிராயப் படுகிறார்கள். இது சம்பந்தமாக வேண்டுமான நடவடிக்கைகள் வக்கீல் மூலம் காரியதர்சி எடுத்துக்கொள்ளவேண்டுமென்று தீர்மானிக்கப்பெற்றது.

## தந்திச் செய்தி

### சிங்கப்பூர் மார்க்கெட்

(நமது நிருபர் தந்தி)

சிங்கப்பூர், அக்டோபர் 9.

ஈயம் ஒருபீக்கல் நூற்றுஒன்பதே முக்காலனரக்கால் வெள்ளி

ரப்பர் ஒரு பீக்கல் இருபத்தாறு. வெள்ளி ஐம்பது காசு

கொப்பரா ஒரு பீக்கல் நான்கு வெள்ளி தொண்ணூறு காசு

அக்டோபர் 7

ரப்பர் ஒரு பீக்கல் இருபத்தாறு வெள்ளி.

---

### கொழும்பு மார்க்கெட்

(நமது நிருபர்)

அக்டோபர் 7உ

லோகல் மார்க்கெட்டில் இன்று மாலை 3-மணிக்கு ரப்பர் விலை 28⅝ ஸெண்டாக இருந்தது.

ரப்பர் கூப்பன் ஒரு பவுண்டுக்கு 20¼ வீதம் விற்பனையாகியிருக்கிறது.

டி கூப்பன 26¾ வீதம் விற்பனையாகியிருக்கிறது.

தேங்காயெண்ணை வெள்ளை டன் 1க்கு 258-75-

புல் எண்ணை ஒரு பவுண்டுபோத்தல் 52 செண்ட்.

தும்பு சுத்தம் செய்தது.ஒரு அந்தர் 2-75 முதல் 4-50.

சுத்தம் செய்யாதது. ஒரு அந்தர் 2-00 முதல் 3-10.

தேங்காய்ப்பூ:—

சிப்ஸ் அண்ட் சிரட் பவுண்டு 12⅜ சதம்.

### இரங்கூன் மார்க்கெட்

(நமது நிருபர் தந்தி)

ரெங்கூன், அக்டோபர் 8

| | |
|---|---|
| படகு நெல் | 97—98 |
| ரயில் நெல் | 97—99 |
| பெரிய மில் ஸ்பெஷல் | 242-8 |
| நெசய்ன் சின்ன மில்ஸ். | 252-8 |
| நசெய்ன் எஸ்கியூ | 285 |
| மீடோன் பஜார் | 272-8-275 |
| மீடோன் எஸ்கியூ | 300-304 |
| ரெடி புழுங்கலரிசி மார்கெட் லாங் | 267-8-277-8 |
| மில்சார் | 257-8, 277-8 |
| புல்பாயில்டு | 255-262-8 |
| பாதாலே | 280-290 |

### சென்னை மார்க்கெட்

சென்னை அக்டோபர் 8.

| | | | |
|---|---|---|---|
| பம்பாய் ஆலைத்தங்கம் | 35 | 1 | 6 |
| ஷை வாயிதா | 35 | 3 | 0 |
| சூஸா தோலா 1-க்கு | 34 | 11 | 6 |
| சவரன் மொத்தம் | 22 | 7 | 0 |
| ஷை [illegible] | 22 | 7 | 3 |
| வெள்ளி 100 ரூ. எடை | 69 | 0 | 0 |
| ஷை ரூ. 1 எடை | 0 | 11 | 3 |

---

## நாடார்மகாஜனசங்கம் மதுரை

(ஒரு நிருபர்)

1935-ம் வருஷம் அக்டோபர் மீ 1உ செவ்வாய்க்கிழமை காலை 11 மணிக்கு சங்கம் ஆபீஸில் தூத்துக்குடி முனிஸிபல் கவுன்ஸிலர் ஸ்ரீமான் K. K. A. பெரிய சாமி நாடார் அவர்கள் தலைமையின் கீழ் நடைபெற்ற ஸ்பெஷல் ஸ்காலர்ஷிப் கமிட்டி மீட்டிங்கில் அடியிற் கண்ட தீர்மானம் நிறைவேறியது. 24 கமிட்டி மெம்பர்கள் ஆஜராகியிருந்தனர்.

தீர்மானம்

24-9-35உ கவுன்ஸில் மீட்டிங்கின் தீர்மானத்திற்கிணங்க பாளையம்பட்டி S. கணேசன் B. A. ஹானர்ஸ் அவர்களை I. C. S. படிப்பதற்கு லண்டனுக்கு அனுப்பப் பொருளுதவி செய்யும் விஷயம் ஆலோசிக்கப்பெற்று ரூ 2500/— ஸ்காலர்ஷிப் கொடுப்பதென்றும் ஷை தொகையில் முதல் தடவையாக ஷை மாணவருக்கு லண்டனுக்குப் புறப்படுவதற்குப் பத்து நாட்களுக்கு முன் ரூ 1500/—ம், 1936-ம்வருஷம் அக்டோபர் மீ 1உ யில் ரூ 1000 மும் கொடுப்பதென்றும் ஏகமனதாகதீர்மானித்து முடிவுசெய்யப்பெற்றது. வந்தனோபசாரத்துடன் மீட்டிங் முடிவு பெற்றது.



## கப்பல் செய்திகள்

### நாகபட்டினத்திற்கும் பினங்குக்கும்

(ஏஜண்டினிடமிருந்து)

புறப்படுதல்

கப்பல்கள் நாகபட்டணத்திலிருந்து மலாய்நாட்டுக்குப் புறப்படும் விபரம் வருமாறு:—

| | | |
|---|---|---|
| எஸ். எஸ். | ரஜூலா | 12—10—35 |
| ,, | ரோனு | 26—10—35 |
| ,, | ரஜூலா | 9—11—35 |
| ,, | ரோனு | 23—11—35 |

வருதல்

கப்பல்கள், மலாய்நாட்டிலிருந்து நாகப்பட்டினத்துக்கு வரும் தேதி வருமாறு:—

| | | |
|---|---|---|
| எஸ். எஸ். | ரோனு | 17—10—35 |
| ,, | ரஜூலா | 31—10—35 |
| ,, | ரோனு | 14—11—35 |

(French Mail)

சைகோனுக்கு புதுச்சேரியிலிருந்து கப்பல் புறப்படும் தேதி:—

| | |
|---|---|
| சாண்டில்லி | 30—10—35 |
| அஜேலி ரிடியா | 28—11—35 |
| லெக்காண்ட் டி லிலில் | 25—12—35 |

---

## மீனாக்ஷி சங்கீதக் கலாசாலை

(நமது நிருபர்)

யுவ ஹு புரட்டாசி மீ 21உ காலை 10 மணிக்கு கண்டனூர் மீனாக்ஷி சங்கத்தின் சார்பில் கண்டனூர் பஞ்சாயத்துப் போர்டு தலைவர் திருவாளர் வயி. ராம. வயிரவன் செட்டியார் அவர்கள் "மீனாக்ஷி சங்கீதக் கலாசாலை"யை ஆரம்பித்து வைத்தார்கள். கலாசாலைக் கட்டிடம் நன்கு அலங்கரிக்கப் பெற்றிருந்தது. உள்ளூர் வெளியூர் நண்பர்கள் ஏராளமாக விஜயம் செய்திருந்தனர். திருவாளர்வயிரவன்செட்டியாரவர்கள்கலாசாலைக்கு விஜயம் செய்ததும் திருவாளர் வயி. ராம. அரு. இராமனாதன் செட்டியார் அவர்களால் மாலை அணிவிக்கப்பெற்று வரவேற்கப் பெற்றார்கள். பின்னர் திரு. ந. வீரப்பன் அவர்கள் கலாசாலை ஆரம்பத்திற்கான காரணங்களைக் கூறிய பின்னர் சங்க உதவிக் காரியதரிசி திரு. சித. இராமநாதன் அவர்களால் திரு. வயிரவன் செட்டியாரவர்களுக்கு வரவேற்புப் பத்திரம் வாசித்தளிக்கப் பெற்றது. அப்பால் திரு. வயிரவன் செட்டியாரவர்கள் கீர்த்தனை ஒன்று பாடி கலாசாலையை ஆரம்பித்து வைத்தார்கள். அதன் பின்னர் பிள்ளைகளுக்கு பாடம் சொல்லிவைக்கப் பெற்றது.

திரு. அரு. குப்பான் செட்டியாரவர்கள் சங்கத்தின் அவசியத்தைக் குறித்து அழகியதொரு சொற்பொழிவாற்றினார்கள்.

திரு. வயி. ராம. வயிரவன் செட்டியாரவர்கள் மீனாட்சி சங்கத்தின் உயரிய நோக்கங்களைப் பாராட்டியும் இக்கலாசாலையை ஆரம்பித்துவைக்கத் தம்மைக் கேட்டுக் கொண்டதற்கு நன்றி செலுத்தியும் பேசினார்கள். பின்னர் திரு.ந. வீரப்பன் அவர்கள் வந்தனங்கூறினார். அனைவருக்கும் சிற்றுண்டி வழங்கப்பெற்று 11 மணிக்கு ஆரம்ப விழா இனிது நிறைவேறியது.

---

## கோனபட்டு

(ஒரு நிருபர்)

இவ்வூர் காந்திவாசக சாலையின்கட்டிடத்தில் 30-9-35ல் மகாத்மா காந்தியடிகளின் 67-வது பிறந்ததினக் கொண்டாட்டம், கலாசாலைத் தலைமை ஆசிரியர், ப. இராமனுதப் பிள்ளை அவர்கள் தலைமையில் நடைபெற்றது. அவ்வமயம் தபாலாபீஸ் தலைமை அதிகாரி திரு. பொன்னுச்சாமி பிள்ளை ராம. சேதுராமன். எஸ். நாகப்பன், சத்தியமூர்த்தி B. A., கணேசர், கல்விச்சாலை தலைமை ஆசிரியர். மெ. மு. பழ. ராமனுதஞ் செட்டியார். V. திருநாவுக்கரசு, T. சோமசுந்தரம் பிள்ளை ஆகியோர்களால் அடிகளின் பெருமையையும் நற்குண நற்செய்கைகளின் வாசகங்களையும் அவர் தம் கொள்கையை நாமும் பின்பற்றி நடப்பது தான் தற்காலக் கடமை யெனவும் மிக விரிவாகப் பேசிய பின் தலைவர் முடிவுகூறக் கூட்டம் இனிது நிறைவெய்தியது.

# இதாலி-அபிஸீனியா யுத்தம்

## 5000 அபிஸீனியர் மாண்டனர்

## ஆயுத ஏற்றுமதிக்கு அமெரிக்கா தடை

## இதாலியப் படைகளால் முன்னேற முடியவில்லை

## இதாலிமீது சங்கத்தின் குற்றச்சாட்டு

லண்டன் அக்டோபர் 1உ

இதாலி 16 நீர்மூழ்கிக் கப்பல்களை செங்கடலில் நிறுத்திவைத்திருப்பதாகத் தெரிகிறது. வெளிநாடுகளிலிருந்து எதியோபியாவுக்கு ஆயுதங்கள் ஏற்றுமதியாவதைத் தடுப்பதற்காகவே இதாலி இவ்வாறு செய்திருக்கின்றதென்று கூறப்படுகிறது.

ஜப்பானிலிருந்தும் அமெரிக்காவிலிருந்தும் பேர்பாரா வழியாக துப்பாக்கிகள், விஷக்காற்று மூடிகள், பீரங்கிகள், யுத்த தளவாடங்கள் முதலியன அனுப்பப்படுகின்றன.

### இருதரப்பார் கைகலப்பு

பாரிஸ் அக்—2உ

இன்று மௌசாலியில் இதாலிப் படைகளும் அபிஸீனியப்படைகளும் கடுமையாகக் கைகலந்ததில் பலர் இறந்துவிட்டனர். மௌசாலி மலைக்கருகில் இத்தாலியப்படைகள் ஹத்துமீறி எதியோப்பிய எல்லைக்குள் புகுந்துவிட்டதாகவும் இதைப்பற்றி விசாரிக்க ஒரு கமிஷன் நியமிக்கவேண்டுமென்றும் அபிஸீனிய சக்கரவர்த்தி சர்வதேச சங்கத்திற்குத் தந்திகொடுத்தார்.

அக்டோபர் 3உ

இதாலிய அபிஸீனிய யுத்தம் இன்றுதான் ஆரம்பமாகியது. அடோவா அடிகிராட் நகரங்கள் மீது இதாலி வெடிகுண்டுகளை வீசியது. பெண்டிரும் குழந்தைகளும் உள்படப் பலருக்குச் சேதம் ஏற்பட்டது. அடோவாவுக்கும் அடிக்ராட்டுக்கு மிடையிலுள்ள அகாமியைத் தாக்க மூற்பட்ட இதாலியப் படைகள் முதன் முதலில் முறியடிக்கப்பட்டன.

### ஆஸ்பத்திரியில் குண்டு

அடோவாவில் இதாலியர் போட்ட முதல் வெடிகுண்டால் சுமார் 1700 பேர் காயமடைந்ததாகச் சொல்லப்படுகிறது. அக்டோபர் 2-ந் தேதி இரவு முழுதும் அபிஸீனிய சக்கரவர்த்தி தூங்கவில்லை. பெரிய ஜன்னலொன்றின் அருகில் உட்கார்ந்து கொண்டு தூரதிருஷ்டிக் கண்ணாடியால் இத்தாலிய யுத்தவிமானங்கள் வருகின்றனவா வென்று பார்த்துக் கொண்டே இருந்தார்.

அக்டோபர் 3-ந் தேதி 7 மணிக்கு அடோவா மீண்டும் தாக்கப்பட்டது. 78 விமான குண்டுகள் வீசப்பெற்றன. அடோவா அடிகிராட் தாக்குதல்களில் சுமார் 40 இத்தாலிய விமானங்கள் கலந்து கொண்டதாகத் தெரிகிறது.

### ஸ்தானீகர் கைதி

ராஸ் சேயம் கவர்னர் அடோவாவிலுள்ள இதாலிய ஸ்தானீகரைக் கைதி செய்ததாகத் தெரிகிறது.

ஹேஸ் அக் 3உ

படை இயக்க உத்திரவுப்படி இதாலிய கோஷ்டி யொன்று புறப்பட்டபோது ஏராளமான ஜனங்கள் முசோலினி வீழ்க என்று கோஷம் செய்தனர். இவர்கள் பிரயாணத்தைப் பொதுஜனங்கள் தடுத்ததில் போலீசார் தலையிட வேண்டியதாயிற்று. 4000 பேருக்குப் படையுத்தரவு அனுப்பப்பட்டதில் 50 பேர் மாத்திரமே உத்திரவுக்குக் கீழ்படிந்துள்ளனர்.

### கிரேக்கர் பகிஷ்காரம்

இத்தாலிக்காவது இத்தாலியிலிருந்தாவது பொருள்களை எடுத்துச் செல்லக் கூடாதென்று கிரேக்க கப்பல் சொந்தக்காரர்கள் உத்திரவிட்டிருக்கின்றனர்.

### புது இன்ஷ்யூரன்ஸ் கம்பெனி

யுத்த ஆபத்துக் கப்பல் இன்ஷியூரன்ஸுக்காக ஒருபுதிய கம்பெனி லண்டனில் ஏற்பட்டுள்ளது. இதில் இதாலியக் கப்பல்கள் இன்ஷியூர் செய்யப்படமாட்டா. இதாலிக்கும் இதாலிக்குச் சொந்தமான இடங்களுக்குப் போய்வரும் கப்பல்களுக்கும் இன்ஷியூர் செய்யப்பெறாது.

### சேத விவரம்

அக்டோபர் 4உ

ஒகாடன் மாகாணத்தில் இன்று காலை பலத்த யுத்தம் நடந்ததில் 2000 எதியோபியர் மாண்டு பலர் காயமடைந்ததாகத் தெரிகிறது.

அடோவாவுக் கருகில் ராஸ் சேயம் கவர்னின் படைகள் தோற்கடிக்கப்பட்டனவாம்.

### "மரணந்தான்"

டைகர் மாகாணத்தில் இத்தாலிய விமானங்கள் ஏராளமான துண்டுப்பிரசுரங்களை வீசின. அவற்றில் "இத்தாலியின் கட்டளை ஏற்றுக்கொள்ளுங்கள் இன்றேல் சாவுதான்" என்று எழுதப்பட்டிருந்தது.

### இத்தாலிய விமானம் வீழ்த்தப்பட்டது

எதியோப்பியாப் படைகள் எரிட்ரியாவில் புகுந்து விட்டன. ராஸ் சேயமின் படையினர் இதாலியரை எதிர்த்து அடோவாவில் போராடினர். இத்தாலிய எல்லைப்புறப் படை வீடுகள் எதியோப்பியர் கைவசமாயின. எரிட்ரிய சுதேசிப் படையினர் பலர் அபிஸீனியருடன் சேர்ந்துகொண்டு விட்டனர்.

அடோவா போர்முனையில் 5000 அபிஸீனியர் இறந்தும் காயமடைந்துமிருப்பதாகச் சொல்லப்படுகிறது.

ஸைபாரியா என்னுமிடத்தில் இருதரப்பாருக்கும் கடும்போர் நடந்துவருகின்றது. இன்னும் 18 தினங்களில் அபிஸீனியப் படைகள் அனைத்தும் ஒன்று திரண்டுவிடும்.

இதாலியர் அடிகிராட்டைப் பிடித்துவிட்டார்கள் என்பது உண்மைதான். இதை எதியோபியரே ஒப்புக்கொள்கின்றனர்.

### பிரஞ்சு மனப்பான்மை

இதாலியே அபிஸீனியாவை வலுவாகத் தாக்கியதென்று அறிவித்து பொருளாதார நிர்ப்பந்தங்களைப் பிரயோகிக்க பிரஞ்சு மந்திரி சபையில் பூரண ஆதரவு இருப்பதாகத் தெரிகிறது.

### மீண்டும் வெடிகுண்டு வீச்சு.

அக்டோபர் 5—

கொராபி, ஜெர்வாகுபி, ஒகாடன் முதலிய இடங்களிலுள்ள எல்லைப்புறக் காவல் நிலையங்களில் இத்தாலி வெடிகுண்டுகளைப் பொழிந்ததாகச் சொல்லப்படுகிறது.

### அடிகிராடில் இத்தாலியக்கொடி

அக்டோபர் 6—

அடிகிராட்டின் இடிந்துபோன பழைய கோட்டையில் இதாலியரின் முதல்படை பிரிவு இதாலியக் கொடியை ஏற்றிவிட்டது. பொதுஜனங்களும் மத குருக்களும் சரண் புகுந்தனர். மற்றொரு படைப் பிரிவு அடோவா பள்ளத்தாக்கு எல்லைக்குச் சென்று இன்று காலை மறுபடியும் முன்னேறியது. வெடி குண்டுகளையும் பீரங்கிகளையும் தாங்க முடியாமல் எதியோப்பியப்படை பின் வாங்கியது. 11-30 மணிக்கு இத்தாலியர் அடோவாவில் பிரவேசித்தனர்.

### இத்தாலி மீது குற்றச்சாட்டு

சர்வதேச சங்க ஷரத்துகளை இத்தாலி மீறிவிட்டதாக ஜினிவா அறுவர் கமிட்டியார் ஒரு முகமாகத் தீர்மானித்து விட்டார்கள்.

பதின்மூவர் கமிட்டியார் தயாரித்துள்ள நகல் சிபார்சுகளில் இரு தேசங்களையும் யுத்தத்தை நிறுத்தும்படி கேட்டுக் கொள்வதென்று ஒரு விதியிருக்கிறது. சர்வதேச சங்கத்தின் பொதுச் சபைக் கூட்டம் புதன்கிழமை 4 மணிக்குக் கூடியது. 12வது ஷரத்து மீறப்பட்டதாக ஏற்பட்டால் முதலில் பொருளாதார நிர்ப்பந்தங்களும், பிறகு ராஜதந்திர உறவில் முறிவும் ஏற்படும். பிறகு அபிஸீனியாவுக்கு யுத்த தளவாடத் தடை நீக்கப்படும். பிறகு இதாலிக்கு ஏற்றுமதி தடைசெய்யப்படும்.

### கடும்போர்

தாலுகில் பிரதேசத்தில் ஏற்பட்ட கடும்போரில் 1300 எதியோபியரும் 201 இதாலியரும் இறந்தனரென்று தெரிகிறது. 5-ந் தேதியன்று காலை 8 மணிக்கு இதாலிய விமானங்கள் டெஸ்ஸியில் குண்டுகளை வீசின. அடோவா 5-ந் தேதி வரையிலும் இதாலியர் வசம் போய்விடவில்லையென்று தெரிகிறது. அபிஸீனியப் படைகள் வெகு மும்முரமாக எதிர்த்து வருகின்றன. அடோவாவுக்கு வடக்கே இதாலியர் தோண்டியிருக்கும் அகழிகளுக்கு எதிரில் பலமான போர் நடக்கிறது. அபிஸீனியர் கொரில்லா போர் முறையை (முதலில் மறைந்திருந்து பிறகு சூழ்ந்துகொண்டு தாக்கல்) ஆரம்பித்துவிட்டனர். எதியோபியரின் கொரில்லா யுத்த முறையை இதாலியப் படையால் சமாளிக்க முடியவில்லையென்று தெரிகிறது.

இதாலியர் மைபாரியாவில் சில குன்றுகளைப் பிடித்துக்கொண்டுவிட்டனர். வாலிடா என்கிற யாவைக்கூட இதாலியர் கைப்பற்றிவிட்டனராம். இருபக்கத்திலும் சேதமுண்டெனினும் எதியோபியர் பக்கமே சேதமதிகம்.

### சர்வதேசசங்க முடிவு

அக்டோபர் 7உ

இத்தாலியே வலுவில் யுத்தத்தை ஆரம்பித்ததென்றும் தன் பிரதேசத்திற்குள்ளாக எதியோபியா செய்து கொண்ட பாதுகாப்பு ஏற்பாடுகளில் குற்றமில்லையென்றும் சர்வதேச சங்க நிர்வாக சபையினர் முடிவு செய்துவிட்டார்கள். நிர்ப்பந்த முறைகள் இதாலி மீது பிரயோகிக்கப் படுமென்பதில் இனிச் சந்தேகமில்லை. அம்முறையின் தன்மையைப் பற்றித்தான் இப்பொழுது கேள்வி.

சமீபத்தில் அமெரிக்காவில் நடுநிலைமை மசோதா வொன்று நிறைவேற்றப்பட்டது. இத்தாலியும் அபிஸீனியாவும் யுத்தம் செய்வதால் இரு தேசங்களுக்கும் அமெரிக்காவிலிருந்து ஆயுதங்களை ஏற்றுமதி செய்யக் கூடாதென்று பிரஸிடெண்ட் ரூஸ்வெல்ட் உத்தரவிட்டு விட்டார். இது இத்தாலிக்கே பெருத்த கஷ்டத்தை உண்டுபண்ணும். விமானங்களுக்கு வேண்டிய பாகங்களை இதுவரை இத்தாலி அமெரிக்காவிலிருந்தே வாங்கிக் கொண்டிருந்தது.

அடோவா இருதரப்பார் வசமுமில்லையென்று சொல்லப்படுகிறது. அடோவா நகரவாசிகள் அங்கிருந்து காலிசெய்துவிட்டுப் போய்விட்டபடியால் எதியோபியர் எதிர்க்கவில்லை.

மலைப்பாங்கான அபிஸீனியப் பிரதேசங்களில் பிரவேசிப்பது வெகு கஷ்டமாக இருக்கிறதென்று இதாலிய சைனிய அதிகாரிகள் சொல்லுகின்றனர்.

---

## சிவகங்கை தாலுகா அரசியல் மகாநாடு.

சிவகங்கைத் தாலுகா அரசியல் மகாநாட்டுக்குத் தலைமை வகிக்க அழைக்கப்பட்டிருந்த திருவாளர். க. அண்ணாமலைப் பிள்ளையும் திறந்துவைக்கவும், கொடியேற்று விழாவுக்காகவும், வாலிபர் மகாநாட்டுத் தலைமைக்காகவும் வாலிபர் மகாநாட்டைத் திறந்துவைக்கவும் முறையே அழைக்கப்பட்டிருந்த கல்லிடைக்குறிச்சி ஸ்ரீமதி லட்சுமி அம்மாள், ஜனாப் உபயதுல்லா சாகிப், திரு. வி. பி. சுப்பையா, திரு. எம். பக்தவத்ஸலம் முதலியவர்களும் தங்கள் பதவிகளை ஏற்றுக்கொண்டுவிட்டார்கள். ஆனால் மகாநாட்டுக்கு குறிப்பிட்ட தினமாகிய 20-ந்தேதி தலைவர் பலருக்கும் சௌகர்யமில்லாமல் இருப்பதால் அக்டோபர் 27-ந்தேதிக்கு மகாநாடு ஒத்தி வைக்கப்பட்டிருக்கிறதென்று தெரிகிறது.

# கடிதங்கள்

### உடற்பயிற்சிக் கழகம் தேவகோட்டை

(ஒரு நிருபர்)

இக்கழக ஸ்தாபன தினமான 3-10-35 தேதி மாலை 4-30 மணிக்கு இவ்வூர் ஜமீன் தார் குமாரர் ஸ்ரீமான் அள. அரு. சோம நாதஞ் செட்டியாரவர்கள் தலைமையில் ஓர் விசேடக் கூட்டம் நடைபெற்றது. ஆரம்பத்தில் ஸ்ரீசொர்ணமூர்த்தி பெண் பாட சாலை மாணுக்கிகளால் கடவுள் வாழ்த்து பாடப்பெற்றது. தலைவர் முன்னுரைப் பிரசங்கம் செய்தார்கள். பின் உடற் பயிற்சி பிரசார சபையின் பிரசாரத் தலைவர் திரு லெ. சோமசுந்தரனர் அவர்கட்கும் பிரசார சபை உறுப்பினரான வி. கே. ஆசாரியார் அவர்கட்கும் யோகப் பயிற்சியாளர் ஸ்ரீமான் சேவு. லெ. ராம. நாராயணன் செட்டியார் அவர்கட்கும் அவரவர்கள் திறமையைப் பாராட்டு முகத்தான் மெடல்களும் நற்சாட்சிப் பத்திரங்களும் அளித்தனர். பின் சித. ராமநாதன் அவர்களால் "உடற்பயிற்சியும் அதன் நலமும்" என்ற ஓர் அரிய கட்டுரை படிக்கப்பட்டது. அ. போத்தி என்பவர் மசில்ஸ் கண்ட்ரோல் செய்து காண்பித்தார். அவருக்கும் கழகத்தாரால் ஓர் வெள்ளிப்பதக்கம் அளிக்கப்பட்டது. கழக மாணவர்களுக்குள் நடந்த பஸ்கி ஓட்டப்பந்தயத்தில் வெற்றிபெற்ற நால்வர்க்கு முறையே பரிசுகள் வழங்கப்பெற்றன. உடற்பயிற்சியின் அவசியம் பற்றியும் அதனை வளர்ப்பதற்குரிய முறைகள்பற்றியும் லெ. சோமசுந்தரனர் அவர்கள் ஓர் பிரசங்கம் செய்தார்கள். தலைவர் முடிவுரைக்குப்பின் வந்தனம் கூற இரவு 7 மணிக்குக் கூட்டம் இனிது நிறைவெய்தியது. அக்கழகம் யுவ சித்திரை 5உ ஆரம்பிக்கப்பட்டு நன்கு நடந்தேறி வருகிறது.

—

### விவேகானந்தர் சங்கம் காரைக்குடி

(ஒரு நிருபர்)

ஷை சங்கத்தின் 3-வது மாதக் கூட்டம் மகாத்மா காந்தி ஜயந்தியை முன்னிட்டு 2-10-35உ மாலை 5-மணிக்கு இந்நகர் நகர சபை வைஸ் சேர்மென் டாக்டர் எஸ். சுப்பிரமணியம் அவர்கள் தலைமையில் நடைபெற்றது. அவ்வமயம் ஷதூமித்திரன் ஆசிரியா திரு. என். சுப்பிரமணியம் அவர்கள் மகாத்மாவின் திட்டங்கள் என்பது பற்றி ஓர் விரிவுரை நிகழ்த்தினர்கள். தலைவரின் முடிவுரைக்குப் பின் உபகாரிய தரிசி ஆர். எம். ஆர். எம் சொக்கலிங்கம் வந்தனங்கூறியதோடு கூட்டம் 7 மணிக்கு இனிது முடிவடைந்தது.

### நாச்சியாபுரம்

(ஒரு நிருபர்)

அக்டோபர், 2.

அக்டோபர் 2உ மாலை 6 மணிக்கு சிவாஜி உடற்பயிற்சி நிலையத்தின் சார்பில் மகாத்மா காந்தியடிகளின் 67ம் ஜயந்தியைக் கொண்டாடும் பொருட்டு ஓர் கூட்டம் நடைபெற்றது. காந்தியடிகளின் உருவப் படத்தை வைத்து இவ்வூர் வித்தியாசாலை மாணவர்கள் சிலர் தேசியகீதம் பாடியபின் கூட்டம் ஆரம்பமாயிற்று. திரு. வீர. வ நா. பழனியப்பா தமது முன்னுரையில் மகாத்மா காந்தியடிகள் நம் நாட்டுக்கு செய்துள்ள தொண்டுகளைப் பாராட்டி சிறிது நேரம் பேசினர்கள். பின்பு முறையே திரு. கருப்பையா அவர்கள், காந்தியடிகளின் ஜீவிய சரித்திரத்தைப்பற்றியும், திரு. ராம நாச்சியப்பன் அவர்கள், கதரின் அபிவிருத்தியைப்பற்றியும், திரு. என். சீனிவாசன் அவர்கள, பொறுமை என்பது பற்றியும் சொற்பொழிவாற்றினர்கள். பின்பு திரு. பழனியப்பா அவர்கள் முடிவுரையில், நண்பர்கள் பேசியதைப் பாராட்டியும், உடற்பயிற்சி நிலையத்தின் வளர்ச்சி பற்றியும் பேசினர்கள். பின் வித்தியாசாலை மாணவர்களால், தேசியகீதம் பாடப்பட்டு கூட்டம் இனிது முடிவடைந்தது.

—

### நேமத்தான்பட்டி திருநாவுக்கரசு சுவாமிகள் வித்தியாசாலை காந்திவிழா

(ஒரு நிருபர்)

2-10-35 புதன்கிழமை மாலை 4 மணிக்கு இவ்வூர் திருவாளர் மு. நா. கா. காசி விஸ்வநாதன் செட்டியார் அவர்கள் தலைமையில் மாணவிகளால் நாட்டு வணக்கம் பாட விழா ஆரம்பமாயிற்று. அது காலை மகாத்மா காந்தியடிகள் சரித்திரத்தை மாணவர்களான கரு. இராமையா, சா. பழனியப்பன், திரு. இலட்சுமணன் சி. காளிமுத்தன், சுப. பிரமுத்து, வீர. இலட்சுமணன், ந. வீரப்பன், கா மெய்யப்பன், இவர்கள் வெகு அழகாகப் பேசினர்கள். பின் சுப. செல்லப்ப செட்டியார், சு. ஆண்டியப்பா, இவர்கள் அடிகளின் சரித்திரத்தை நீண்டநேரம் பேசியும் அவரின் அடிச்சுவட்டை பின்பற்றி எல்லோரும் நடக்கவேண்டுமென்றும் கேட்டுக் கொண்டனர். மாணவிகளால் நாட்டுக் கும்மி அடிக்கத் தலைவர் முடிவுரையுடன் ஆசிரியர் சு. ஆண்டியப்பா அவர்களால் நன்றிகூறப்பெற்று சந்தனம் சிற்றுண்டி வழங்க கூட்டம் 5-30 மணிக்கு இனிது நிறைவேறியது. உள்ளூர் அன்பர்களும் பெண்களும் பலர் குழுமியிருந்தது குறிப்பிடத்தக்கது.

## ரயில் வண்டிப் போக்கு வரவு.

அக்டோபர் முதல் தேதி முதல் பின்வருமாறு ஓடுகிறது

திருச்சி—மானுமதுரை.

| | | 25 நிர் பாசஞ் | 1 நிர் மெயில் | 67 நிர் பாசஞ் | 29 நிர் பாசஞ் | 31 நிர் பாஸ்ட் | தனுஷ் எக்ஸ். |
|---|---|---|---|---|---|---|---|
| திருச்சி ஜங் | புறப் | 4–20 | 7–45 | 10–55 | 13–20 | 17–50 | 21–50 |
| காரைக்குடி | வரும் | 6–47 | 9–59 | 13–52 | 16–0 | 20–10 | 0–23 |
| | புறப் | 6–53 | 10–5 | 14–10 | 16–13 | 20–24 | 0–29 |
| மானுமதுரை | வரும் | 8–41 | 11–42 | 16–8 | 17–57 | 22–10 | 2–10 |
| | புறப் | 8–51 | 12–5 | 16–18 | 18–18 | ...... | 2–22 |

மானுமதுரை—மதுரை.

| | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| மானுமதுரை | புறப் | 8–4 | 8–51 | 14–30 | 16–18 | 18–18 | 23–20 |
| மதுரை | சேர் | 9–25 | 10–7 | 15–50 | 17–35 | 19–58 | 0–40 |

மதுரை—மானுமதுரை.

| | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| மதுரை | புறப் | 0–45 | 6–50 | 8–15 | 10–40 | 16–45 | 18–15 |
| மானுமதுரை | வரும் | 2–0 | 8–2 | 9–42 | 11–51 | 18–6 | 19–43 |

மானுமதுரை—திருச்சி.

| | | 32 நிர் பாசஞ் | 68 நிர் பாசஞ் | 34 நிர் | 30 நிர் | மெயில் | 20 நிர் | எக்ஸ்பிரஸ் |
|---|---|---|---|---|---|---|---|---|
| மானுமதுரை | புறப் | ...... | 8–12 | 10–2 | 12–10 | 14–33 | 18–22 | 23–28 |
| காரைக்குடி | வரும் | ...... | 10–2 | 11–59 | 13–55 | 16–11 | 20–6 | 1–19 |
| | புறப் | 6–55 | 10–8 | 12–5 | ...... | 16–20 | 20–12 | 1–29 |
| புதுக்கோட்டை | புறப் | 8–2 | 11–15 | 13–17 | ...... | 17–28 | 21–20 | 2–25 |
| திருச்சி (ஜங்) | சேர் | 9–30 | 12–35 | 15–0 | ...... | 18–45 | 22–40 | 3–52 |

# அபிசீனியாவின் சரித்திர விபரம்

(5-ம் பக்கத் தொடர்ச்சி)

னியாவைப்பற்றி யேர்கள் அறிந்தால் போதுமானது.

1868-ம் வருஷத்தில் பிரிட்டிஷ் காரார்கள் அபிஸீனியாவுக்கு ஒரு தூதுகோஷ்டியை அனுப்பினார்கள். இதைக் கண்டவுடன் பிரஞ்சுக்காரர்கள் மெதுவாக அபிசீனியாவுக்குப் புறப்பட்டார்கள். 1869-ம் வருஷம் இத்தாலியர்கள் வியாபாரம் மட்டும் செய்ய அபிசீனியாவுக்கு வந்தார்கள். 1885-ம் வருஷம் ரஷியர்கள் மதப்பிரசாரம் செய்ய அபிசீனியாவிடம் அனுமதி கேட்டார்கள். இவர்களை யெல்லாம் அபிசீனியா அரசர் நன்கு உபசரித்து வியாபாரம் செய்ய இடம் கொடுத்தார்.

இச்சமயத்தில் அபிசீனியா ராஜ்ஜியத்துக்குள் கலகமாயிருந்தது. ஜான் என்ற அரசனும் மெனிலக் என்பவரும் சண்டைபோட்டுக் கொண்டார்கள். இது ஐரோப்பியர்களுக்கு அனுகூலமாயிருந்தது. இதாலியர்கள் ஜானிடம் சேர்ந்து அவனைத் தூண்டி விட்டார்கள். ஆனால் 1887-ம் வருஷம் ஜனவரி மாதம் 26-ந் தேதி டொகாலி என்ற விடத்தில் இத்தாலியர்களை மெனிலக் சிதறடித்தான். சண்டையில் ஜான் சுடப்பட்டு இறந்தான். மெனிலக் சாதாரண குலத்தில் உதித்தவன். ஜானுக்குச் சந்ததியில்லாததால் மெனிலக் பட்டத்துக்கு வந்தான்.

## உஸிலி சமாதானம்

1889-ம் வருஷம் மே மாதம் உஷிலி என்ற விடத்தில் இதாலியர்கள் ஒரு சமாதானத்தைச் செய்து கொண்டார்கள். அபிசீனியாவுக்கு 40 ஆயிரம் பவுன்கள் கொடுத்து ஆயுதங்களும் உதவினார்கள். இதன் பின்னர் வெளிக்கு அபிசீனியா இத்தாலி பாதுகாப்பிலிருப்பதாக இத்தாலி கூறிக்கொண்டிருந்தது. இச்சமயத்தில் ரஷ்யா ஒரு தூதுகோஷ்டியை அபிசீனியாவுக்கு அனுப்பிய பொழுது இத்தாலி அவர்களை அபிசீனியாவிற்குள் விட மறுத்தது. ரஷ்யாவுக்கும், இத்தாலிக்கும் ஒரு சிறு யுத்தம் ஏற்பட்டதில் ரஷ்யா தோற்றுப்போய் விட்டது. மெனிலக் அரசாண்டு வருகையில் ஜானின் பிள்ளை என்று கூறிக்கொண்டு வந்த ஒருவன் அபிசீனியா தமக்குக் கிடைக்க வேண்டுமென்று வாதாடினான். ஆனால் மெனிலாக் ஐரோப்பியர்கள் உதவியை நாடினான். உடனே இத்தாலி மெனிலக் இத்தாலி பாதுகாப்பிலிருப்பதால் தங்கள் உத்திரவில்லாமல் ஐரோப்பியர்களிடம் பேசக்கூடாதென்று உத்திரவிட்டார்கள். உடனே மெனிலக் இத்தாலியாளர்களை விரட்டிவிட எத்தனித்து படைகளைத் திரட்டினான். 1396-ம் வருஷம் பிப்ரவரி மாதம் 29-ந்தேதி இத்தாலியாளர்களை மெனிலக் தோற்கடித்தான். 10 ஆயிரம் இத்தாலியர்கள் கொல்லப்பட்டார்கள். 7 ஆயிரம் இத்தாலியர் சிறை செய்யப்பட்டார்கள். பல்லாயிரக் கணக்கான இத்தாலியர்கள் சித்திரவதை செய்யப்பட்டார்கள். 72 துப்பாக்கிகள் கைப்பற்றப்பட்டன. இந்த யுத்தம் அடுவா என்ற ஸ்தலத்தில் நடைபெற்றது. ஒரு சிறிய சமஸ்தானம் ஒரு பெரிய வல்லரசான இத்தாலியாவை இம்மாதிரி தோற்கடித்தது சரித்திரத்திலே முதலாவதாகும். நாகரிகமில்லாத அபிஸீனியர்களின் பெயர் இச்சண்டை மூலம் வெளியே தெரியவந்தது. ஐரோப்பியர்கள் ஆச்சரியப்பட்டார்கள். 1896-ம் வருஷம் அக்டோபர் மாதம் 26-ந்தேதி இத்தாலியர்கள் சமாதானத்துக்கு அபிஸீனியர்களிடம் வந்தார்கள். அடிஸ் அபாபாவில் சமாதானம் ஏற்பட்டது. அதில் எரிடிரியாவில் இத்தாலியர்கள் வியாபாரம் செய்து கொள்ளவேண்டும் என்றும், தங்களது வியாபார ஸ்தலத்தைப் பெருக்கிக்கொள்ளக்கூடாதென்றும் வர்புறுத்தப்பட்டது.

1902-ம் வருஷம் மேமாதம் 15-ந்தேதி அடிஸ் அபாபாவில் சூடானுக்கும், அபிஸீயாவுக்கும் ஒரு உடன்படிக்கை ஏற்பட்டது. இந்த உடன்படிக்கை மூலம் அபிசீனியாவின் எல்லை நிர்ணயிக்கப்பட்டது. சூடானிலிருந்து உஜந்தாவுக்கு அபிசீனியா எல்லை மூலம் பிரிட்டிஷார் ரயில் போக்குவரத்து செய்துகொள்ள வசதி ஏற்பட்டது.

## மெனிலக் மன்னனுக்குப் பிறகு

1913-ல் மெனிலக் இறந்தான். அவனுக்குப் பிள்ளைகள் கிடையாது. பெண்கள் இரண்டு உண்டு. மூத்தப் பெண்ணின் பிள்ளைகளில் ஐயாசு என்பவனை பட்டத்துக்கு வரும்படி ஏற்பாடு செய்திருந்தான். இந்த ஐயாசு ஒரு சிறு வாலிபன் அவன் கிறிஸ்துவ மதத்தைச் சேர்ந்தவனல்ல, மகமதிய குலத்திலிருந்து வந்ததாகக்கூறி அபிசீனியாவில் முகமது மதத்தை ஸ்தாபித்தான். மகமதியபெண்களை மணந்தான். உடனே அவனைப் பிரபுக்கள் பட்டத்திலிருந்து விரட்டிவிட்டார்கள். மெனிலக்கின் இரண்டாவது பெண் உடனே அபிசீனியாவின் அரசியாக வந்தாள். அவள் ஐரோப்பியர்களைக் கண்டால் வெறுப்பவள். இத்தாலியர்களைத் துரத்த வேண்டுமென்று ஏற்பாடுகள் செய்தாள். அவளுக்குப்பின் ராஸ்டபாரி என்பவர் அரசராக வந்தார். இவருக்கு ஆங்கிலம், பிரஞ்சு பாஷை நன்கு தெரியும். நாகரிகமுடையவர். 1923-ம் வருஷம் இவருக்கு ஐரோப்பாவில் உபசாரம் நடந்தது. 1925-ம் வருஷத்தில் இவருக்கு பாரிஸிலும், ஜெர்மனியிலும், லாக்கின்ஹாம் அரண்மனையிலும் விருந்து நடத்தப்பட்டது. அவர் அபிசீனியாவில் புதியகட்டிடங்களைக் கட்டினார். மின்சார விளக்குகள் போட்டார். புதிய ஆயுதங்களை வாங்கினார்.

அபிசீனியர்கள் என்ற எதியோப்பியர்கள் வீரர்கள். அஞ்சா நெஞ்சம் படைத்தவர்கள். தங்கள் உயிரைக் கொடுத்தாலும் கொடுப்பார்கள். தங்கள் ராஜ்யத்தை அந்நியர் கையில் கொடுக்கச் சம்மதிக்க மாட்டார்கள். வாலிஸ் பட்ஜ் எம். ஏ. எல். எல். டி. கூறும் வார்த்தையை அப்படியே படித்தால் அபிசீனியர்களின் வாழ்க்கை தெரியவரும்.

## மலையடர்ந்த நாடு

அபிசீனியா ராஜ்யம் மலைகளடர்ந்த பிரதேசம். ஏராளமான பள்ளத்தாக்குகளும், ஏரிகளுமுடையது. பல நதிகள் உள்ளது. கற்கோட்டைகளையும், நீண்ட அகழிகளையுமுடையது. சென்ற 5000 வருஷங்களாக ஒருவராலும் ஜயிக்கப்படாமல் ஒரே ஜாதியர்களால் ஆளப்படுவது அபிசீனியா ஒன்றே. அபிசீனியா இயற்கை அழகுடைய தேசம். அங்கு உஷ்ணம் 160 டிகிரியாயிருக்கிறது என்றால் தேசத்தின் நிலைமையை அறியுங்கள். அபிசீனியர்களிடம் அதிகப்பணம் கிடையாது. அதனால்தான் அவர்கள் நவீன நாகரீகத்துடன் விளங்கவில்லை. படைகளையும் சீர்திருத்தம் செய்யவில்லை. 5000 வருஷங்களுக்கு முன் இருந்த மாதிரியே இன்னுமிருக்கிறார்கள்.

அபிசீனியாவில் அநேக ஏரிகள் இருக்கின்றன. அவைகளில் முக்கியமானது சானா. 300 அடி ஆழமுடையது. ராஷ்டாஷன் என்பது மிகப்பெரிய மலை. 15160 அடி உயரமுடையது. அபிசீனியாவில் பல காடுகளுண்டு. அங்கு கொடிய விலங்குகள் சஞ்சரிக்கின்றன. புலிகளும் சிங்கங்களும், காட்டெருமைகளும், மனிதக் குரங்குகளும் இங்கு அதிகம். பலவித கொடிய பறவைகள் இந்த ராஜ்ஜியத்தில் உண்டு. இங்கு நெல், தான்யம், பார்லி, காபி முதலியவைகள் சாகுபடி செய்யப்படுகிறது. பழத்தோட்டங்கள் அதிகம் பயிரிடப்படுகிறது.

## வியாபாரம்

பிரஞ்சுக்காரர்கள் ஜிபூதியிலிருந்து அடிஸ் அபாபாவுக்கு ரயில் போட்டிருக்கிறார்கள். தபால் தந்தி போக்குவரத்துகள் அவர்கள் ஆதிக்கத்திலிருக்கின்றன. ஆண்டுதோறும் 20 லக்ஷம் பவுனுக்கு அபிசீனியாவில் வியாபாரம் நடைபெறுகிறது. ரயில் மூலம் 88,924 பவுன் வியாபாரம் நடக்கிறது. அபிசீனியாவுக்கும் இத்தாலிக்கும் 27,900 பவுன் வியாபாரம் நடக்கிறது. இங்கிலீஷ்காரர்களுக்கும் அபிசீனியாவுக்கும் 74,000 பவுன் வியாபாரம் செய்யப்படுகிறது. சூடானுக்கு அபிசீனியாவிலிருந்து சர்க்கரை பல லக்ஷத்துக்கு வியாபாரம் நடக்கிறது. அபிசீனியாவில் ரப்பர்த்

14-ம் பக்கம் பார்க்க

## அபிசீனியாவின் சரித்திர விபரம்

(12-ம் பக்கத் தொடர்ச்சி)

தோட்டங்கள் அதிகம். ஆண்டுதோறும் 1180 டன் ரப்பர் அபிசீனியா வெளிநாடுகளுக்கு அனுப்புகிறது. தந்தங்கள் இங்கிலாந்துக்குப் போகிறது. ஐரோப்பாவுக்கு அரக்கு ஏற்றுமதியாகிறது. ரப்பரும், தந்தமும் அபிசீனியா அரசாங்கத்தின் மூலம் வியாபாரம் செய்யப்பட வேண்டும். ஜப்பானுக்குத் தேயிலை போட்டுக்கொள்ள அபிசீனியா அநேக ஆயிர ஏக்கர்கள் குத்தகைக்கு விட்டிருக்கிறது. அபிசீனியாவில் தங்கம் கொஞ்சம் கிடைக்கிறது. அது உள்நாட்டு நாணயங்களுக்கு உபயோகப்படுகிறது.

மெனிலக் காலமுதல் நாணயம் அச்சிடப்படுகிறது. வெள்ளி டாலர்கள் இரண்டு வீதம் அங்கு உபயோகப்பட்டு வருகிறது. பொதுவாக குர்ஷ் என்ற செம்பு நாணயம் மக்களிடம் உபயோகப்பட்டு வருகிறது.

### விசித்திர பஞ்சாங்கம்.

அபிசீனியா பஞ்சாங்கம் விசித்திரமானது. மாதங்கள் 12 கொண்டது ஒரு வருஷம். 30 நாட்கள் கொண்டது 1 மாதம். எந்த மாதத்தில் 5 தினங்கள் அதிகமாக சேர்த்துக் கொள்ளப்படுகிறதோ அது லீப் வருஷமாகும்.

அபிசீனியாவில் உஷ்ணமதிகம். வரட்சி காலம் சதுப்புகாலம் என்று ஆண்டில் இரண்டே பாவிக்கப்படுகிறது. ஆண்டு தோறும் 20 அங்குல மழையே பெய்கிறது. அக்டோபர் முதல் மே வரையில் காற்றடி காலம். ஜூன் முதல் செப்டம்பர் வரையில் மழைகாலம், மலைகளில் எப்பொழுதும் பனி உறைந்துகொண்டிருக்கும் எரிமலைகள் பல அபிசீனியாவிலுண்டு உப்புமலைகளுமிருக்கின்றன. பூகம்பம் அடிக்கடி ஏற்படுவதுமுண்டு. 1855-ம் வருஷம் டாமபன் என்ற பெரிய நகரம் பூகம்பத்தினால் புதையுண்டு போயிற்று.

கடவுள் ஒருவர் என்ற கொள்கைகளையுடைய அபிசீனியர்கள் பல விரதங்களை அனுஷ்டிப்பார்கள். இளகிய மனதுடையவர்கள். அபிசீனியர்களுக்கு அதிக நாடுகள் பிடிக்கவேண்டுமென்ற அவா கிடையாது. அப்படி இருந்தால் 18-ம் நூற்றூண்டு இறுதியில் ஆப்பிரிக்கா தேச முழுவதையுமே கைப்பற்றி இருப்பார்கள். ஆனால் அவர்கள் தங்களது தேசத்தில் ஐரோப்பியர்களுக்கு வியாபாரம் செய்ய இடம் கொடுத்து பல பிரதேசங்களை இழந்துவிட்டது முதல் பிறருடைய விஷயங்களில் பிரவேசிக்காமல் இருந்துவருகிறார்கள்.

19-வது 20-வது நூற்றூண்டு விஞ்ஞான அதிசயங்களையாவது, நாகரீகத்தையாவது பழக்க வழக்கங்களையாவது அவர்கள் கைப்பற்றாமலிருந்து வருவதிலிருந்து அபிசீனியர்களின் வாழ்க்கை தெரியவரும்.

### நதிகள்

அபிசீனியாவிலிருந்து உற்பத்தியாகிற நதிகள் பல. டாகேஸ் என்ற நதி எகிப்துக்கு உபயோகப்படுகிறது. அங்கு அது அட்பாரா என்ற பெயரால் அழைக்கப்படுகிறது- அபை என்கிற நீலநைல் கார்டம் என்ற இடத்தில் நைலோடு சேருகிறது. இதன் நீளம் 1100 மைல்கள். ஹவாஷ் என்ற நதியும், ஓமோ என்ற நதியும் முக்கியமானது. அபிசீனியாவிலிருந்து வருகிற நைல் நதியின் ஜலத்தைக்கொண்டு தான் பிரிட்டிஷார் சூடானில் விவசாயம் நடத்தவேண்டும். அபிசீனியாவை பிரிட்டிஷார் விரோதித்துக்கொண்டால் சூடானுக்கு ஜலம் கிடைக்காது.

அபிசீனியா ஒரு சிறிய ராஜ்யமாயிருந்த போதிலும் இன்று உலகில் இருக்கும் பெரிய ராஜ்யங்களுக்குச் சமத்துவமாயிருக்கிறது. 1925-ம் வருஷம் இத்தாலி மூலம் அபிசீனியா சர்வதேச சங்கத்தில் அங்கத்தினராய்ச் சேர்ந்தது அபிசீனியாவில் அடிமைத்தனத்தை ஒழித்துப்போட இத்தாலி சிறிது காலம் வேலைசெய்தது. அபிசீனியா விஷயத்தில் பிரஞ்சுக்கு சிரத்தைகிடையாது. பிரஞ்சுக்கு ஜர்மனியைக் கண்டால் பிடிக்காது. ஆகையினால் பிரஞ்சு, இத்தாலியுடன் நேசம் பாராட்டுகிறது. ஜப்பானுக்கு அபிசீனியா பலவிதங்களில் உதவி செய்திருக்கிறது. ஜப்பான் அதற்குப் பதில் அபிசீனியாவுடன் எல்லா விஷயத்திலும் ஒத்துவருகிறது.





## நோட்டீஸ்.

இதனால் சகலமானவர்களுக்கும் தெரிவிப்பதென்னவென்றால் நான், ராமநாதபுரம் ஜில்லா திருப்பத்தூர் தாலூகா பள்ளத்தூரிலிருக்கும் கோபாலய்யர் குமாரர் ஏஜண்டு G. வெங்கட்டராமய்யருக்கு 3—2—1933உ ரிஜிஸ்டர் தஸ்தவேசு மூலம் எழுதிக்கொடுத்திருந்த ஜெனரல் பவரை இதன்மூலம் ரத்து செய்யப்பட்டிருக்கிறதென்றும், மேற்படியார் நடபடிக்கை யாதொன்றும் என்னையாவது என் வார்சுகளையாவது கட்டுப்படுத்தாதென்றும் ஷெயாருடன் செய்யக்கூடிய எவ்வித நடபடிக்கையும் என்னையாவது என் வார்சுகளையாவது கட்டுப்படுத்தமாட்டாதென்றும் தெரிவிக்கலாயிற்று.

இப்படிக்கு
A. RM. AL Ramasamy Chettiar,
3—10—35.
Pallathur.









## நோட்டீஸ்.

சிவகெங்கை
**டி. முன்சீப் கோர்ட்டு**
O. S. No. 199. of 1935.
I. A. No. 705. of 1935.

| | | |
|---|---|---|
| பி. நா. ராம. லெ. வெங்கிடாஜலம் செட்டியார் | 1. | வாதிகள் |
| குழ. கா. லெ. சுப்பிரமணியன் செட்டியார் | 2. | |
| Raja of Sivaganga ஷெயார் பவர்பெற்ற திவான் அவர்கள் மூலம் | 1. | பிரதிவாதிகள் |
| ஆ. அருளாநந்த | 2. | |
| மு. வீரப்பன் | 3. | |
| குப. சி. முத்தய்யாக்கோன் | 4. | |
| குப. பி. முத்தய்யாக்கோன் | 5. | |
| சுப. மு. வேலு மேஸ்திரி | 6. | |

பிலாமிச்சம்பட்டி கிராமம் கண்மாய்க்குப் பாத்தியமானதும் பிராதுடன் ஸ்கெச்சில் கண்டதுமான A 2. B 1. B 2. Chanells கள் வாதிகளுக்கும் 6-ம் பிரதிவாதிக்கும் பாத்தியமென்று declare செய்து ஷெ Chanells களில் 1 முதல் 5 வரை பிரதிவாதிகள் யாதொரு அக்கிரம பிரவேசமும் செய்யக்கூடாதென்றும் ஷெ Chanells களின் வழியாய் வரும் தண்ணீரை divert செய்யவாவது கூடாதென்று Perment இஞ்ஜங்ஷன் பரிகாரம் பெறவும் இன்னும் மற்ற விதமாயும் பரிகாரம் பெற வாதிகளால் ஷெ நிம்பரில் தாவா வியாஜ்யம் செய்யப்பட்டிருப்பதில் 2 to 5 பிரதிவாதிகளை கோவினிப்பட்டி கிராம குடிகளுக்கு Rep-esentatives களாகச் சேர்த்துக்கொள்ள I. A. 705-35ல் அனுமதி கோரி தாவா வியாஜ்யம் செய்யப்பட்டிருப்பதில் ஷெ மனுவானது 1935-ம் ௵ அக்டோபர் மீ 24உ வாய்தா போடப்பட்டிருக்கிறது. ஷெ வாய்தாவில் ஷெ கோவினிப்பட்டி கிராம குடிகள் ஷெ வியாஜ்ஜியத்தில் சேர விரும்புகிறவர்கள் சேர்ந்துகொள்ளலாமென்று இதன் மூலம் அறிவிக்கப்பட்டிருக்கிறது.

V. Sundaram Iyer,
Pleader
7—10—35. Sivaganga.

## நோட்டீஸ்

தேவகோட்டை
**டி. முன்சீப் கோர்ட்டு**
1932௵ O. S. No. 41.
1935-௵ I. A. No. 332.

| | |
|---|---|
| கானாடுகாத்தானிலிருக்கும் அ. பெ. அ. சுப்பிரமணியன் செட்டியார் | வாதி |
| ஷெயூர் சித. நா. கருப்பய்யா பிள்ளை | பிரதிவாதி |

ஷெ வாதி வக்கீல் கொடுத்த கோட்டீஸ்:—

ஷெ நிம்பரில் பைனல் டிக்கிரி செய்யவேணுமாய் கோரி வாதிமனுப்போட்டு ஷெ பிரதிவாதிக்கு நோட்டீஸ் போய் சார்வாகாததால் Substituted service க்கு ஆர்டராகி 16—10—35 ந்தேதி வாய்தா போடப்பட்டிருக்கிற விபரத்தை இதன்மூலம் பிரதிவாதிக்கு தெரிவிக்கப்படுகிறது.

(Sd) S. Srinivasaraghava Iyenger
வாதி வக்கீல்.
28—9—1935.

# உலகப்பிரசித்திபெற்ற துப்பறியும் நிபுணர் ஒருவரை "G3" யை சோதிக்கச் சொன்னதில் அவர் கண்டுபிடித்தது இதுதான் ... ... ... ...

**உலக முழுதும் கீர்த்திபெற்ற நியூயார்க் துப்பறியும் நிபுணர்—ஸ்காட்லண்ட் யார்டு உத்தியோகஸ்தர் குட்ஈயரின் பெரிய "G-3" டயர் ஒவ்வொரு நாளும் உண்மையில் இதர டயர்களைவிட 43% மிகுதியான மைல்கள் தடையின்றி செல்கின்றதென்பதை தெளிவு படுத்துகிருர்.**

குற்றங்களைக் கண்டுபிடிக்கப் போராடுவோர் அனைவரும் பாரட் என்பவர் பெயரை நன்கறிவர். நியூயார்க் துப்பறி இலாகாவின் தலைவர் இன்ஸ்பெக்டர் பாரட், தனது அரிய வேலைகளால் ஸ்காட்லண்ட் யார்டு சூரத் ஜனரல் ஆகியவற்றில் நெருங்கிய உறவு கொண்டுள்ளார். அரும்பெரும் ரகசியங்களை எல்லாம் கண்டுபிடித்துள்ளார். இவரே அமெரிக்காவில் விரல் அடையாள முறையைப் புகுத்தியவர். விரல் அடையாளத்தைக்கொண்டு U. S. A. யில் பெயர்வாய்ந்த கிரிஸ்பி வழக்கில் எதிரியைக்கண்டுபிடித்து முதல் முறையாகத் தண்டிக்கச் செய்தார். எனவே, G. 3-யின் பெருமையை பொதுமக்களுக்கு வெளிப்படுத்தத் தக்கவர் இவர்தான் என்று குட் ஈயர் முடிவுசெய்தது. ஏனென்றால் டயர் விளம்பரத்தில் அதிகப்படியான பெருமைகள் இருப்பதால்—ஆதாரமில்லாத அனுபவங்கள் ஏற்பட்டிருப்பதாகச் சொல்வதால் அவற்றில்—'குட் ஈயர்' வெறுப்புற்று, அதன் சரியான திறமையை வெளிப்படுத்த இன்ஸ்பெக்டர் பாரட்டை நியமித்துள்ளார். இவற்றைக்கொண்டு கார் வைத்திருக்கும் நீங்கள் டயர் வாங்குவதில் உண்மை அறியலாம்

## "G–3" எவ்வளவு சிறப்பு வாய்ந்தது?

ஒருவருடத்திற்கு முன் G—3 வெளிவருமுன் குட்ஈயர் கம்பெனியார் தயார்செய்த டயர் யாவற்றிலும் இதுவே தலைசிறந்தது என்பது அன்று நடைபெற்ற சோதனையால் தெளிவாயிற்று.

டிரைவர்கள் இரக்கமின்றி 50 வரை ஓட்டி திடீரென பிரேக் போட்டதும் அதனால் பிரேக் தேய்ந்தும்கூட இரவு பகலாக G—3 தேய்வுறாது ஓடிக்கொண்டிருந்ததும் நீங்கள் அறிவீர்கள். குட் ஈயர் டயரை விட 43% மிகுதியாகவும் இதர டயர்களைவிட இருமடங்கு அதிகமாகவும் தேய்வுறாதிருந்ததும் அறிவீர்கள்.

தற்பொழுது குறிப்பிட்ட டிரைவர்கள் சம்பந்தப்பட்டமட்டில் G—3 எவ்வாறு உழைக்கிறது என்பதை 'குட் ஈயர்' சோதிக்க விரும்புகிறது. பெரும் வேகத்தால் ஓட்டுவதால் ஓர் டயர் செல்லவேண்டும் மைல் தூரம் குறைகிறது. கவனமாக, மிதமாகச் செல்லும் டிரைவர்—அதிவேகமாக ஓட்டும் டிரைவரைவிட அதே டயரைக்கொண்டு 3 அல்லது 4 பங்கு அதிகமான மைல்கள் போவதாக எஞ்சினீயர்கள் கணக்கிட்டுள்ளார்கள். இன்ஸ்பெக்டர் பாரட், டிரைவர்களோடு கலந்து—டயர்களை பரிசோதித்து—ஸ்பீடா மீட்டரை வாசித்து எல்லா நாடுகளிலுமுள்ள—கூட்டமிகுந்தநகரங்களில்— சஞ்சாரமில்லாத ரோடுகளில் இதுவிஷயமாக ஆராய்ச்சி செய்துள்ளார்.

ஜோஸப் எ. பராட்.
பெர்ட்டில்லியன் முறையும் விரல் அடையாள முறையும் அமெரிக்காவில் புகுத்தியவர். நியூயார்க் போலீஸ்இலாகவில் உதவிக்கமிஷனராகவிருந்தவர். அமெரிக்கா துப்பறி இலாகாவின் தலைவர், அமெரிக்கா போலீஸ் தலைவர்கள் சங்கத் தலைவர். தற்பொழுது அவர் G. 3. யில் பிரயாணஞ்செய்து துப்பறிய ஏற்படுத்தப்பட்டுள்ளார்

## அவர் அனுபவங்கள்.

கேஸ் 81. டாக்ஸி வண்டி டயர் No 1836447 K. நாள் 1-க்கு சராசரி மைல் 200. சென்ற 3 மாதங்களில் 16844 மைல். அடிக்கடி பிரேக் பின் சக்கரத்திலுள்ள G—3 டயர் மிகச் சிறிதே தேய்ந்துள்ளது. இதர சக்கரங்களில் 2 முதல் 5 மாதம் சென்ற வேறு டயர்கள். அவை நன்றாக தேய்ந்து போயின. G—3 100% மிகுதியான மைல் செல்லுமென்று டிரைவர்கள் கூறுகிருர்கள்.

கேஸ் 99. போலீஸ் கார். டயர் நிம்பர் 56?136K—மொத்தம் மைல் 34,011. 10,000 மைல் சென்ற இதர டயர்கள் நன்றாக தேய்ந்துபோயின. அதை ஓட்டிய போலீஸ் தலைவர் "G 3" 50% மிகுதியான தூரம் செல்லும் என்கிருர்.

கேஸ் 63. வியாபாரிகள். டயர் நிம்பர் 027490266K. மொத்த மைல் 37389. பெரும் பகுதி மலைப்பாதைகள் ட்ரெட். இன்றும் நல்லநிலை தான். டிரைவர் "G 3" இன்னும் 50% மிகுதியான தூரம் தேய்வுறாது செல்லும் என்கிருர்.

கேஸ் 103. டிரக். டயர் நிம்பர் 95655347 6K. 4.25-16 ஹெவிடூட்டி "G 3" ஸ்பீடாமீட்டரில் 79464 மைல்கள். 100 முதல் 150 இடங்களில் ஒவ்வொரு நாளும் நிறுத்தப்பட்டது. பட்டன் இன்னும் தெரிகிறது. ட்ரைவர் 45% தடையின்றி செல்லும் என்கிருர்.

## ஏராளமான ரிபோர்ட்டுகள்

இவை இன்ஸ்பெக்டர் பாரட் கேஸ் புத்தகத்திலுள்ள நூற்றுக்கணக்கானவற்றுள் குறிப்பிட்ட ஒரு சில. இத்தகைய நூற்றுக்கணக்கான ரிப்போர்ட்டிலும் இதே விபரம் அறியலாம். இவை யாவும் பெரும் பொருளால் செய்த டயர்கள். நீங்கள் வாங்கிய டயர்கள் யாவற்றிலும் தேய்வதில் மெதுவாகவும், நீண்டநாள் உழைப்பதாகவும், பயமின்றி செல்லத்தக்கதுமாக விருக்கிறது. இவை, குட்ஈயர் வியாபாரிகளிடம் இருக்கின்றன.

இவை உண்மை என்பதற்கு இன்ஸ்பெக்டர் பாரட் வார்த்தைகளே நக்க சான்று.

### குட்ஈயரின் புதிய "G-3" அளிக்கும் பலன்!

அகலமான டிரெட்டுடன் கூடிய ரஸ்தா சம்பந்தம்.

சட்டென்று நிறுத்தலாம்; அதிக ரோட்டுப் பிடிமானம். மத்தியில் ஸ்கிட்டாகாத விசேஷ அம்சம்.

சுலபமான ஸ்டீரிங்; மிருதுவான சவாரி.

நெருக்கமான ஸ்கிட்டாகாத பிளக்குகள் மெதுவாகத் தேய்கின்றன. டிரெட்டில் அதிக ரப்பர் - டயர் 1-க்கு 2 பவுண்டுகள் அதிகம்.

இவை யாவும் சேர்ந்து,

**43%** ஸ்கிட்டாகாத அதிக மைல், ஓட்டத்தை யளிக்கிறது.

பிரத்யேக செலவு எதுவுமில்லை!

**GOODYEAR**

"G 3" செய்வதற்கு செலவதிகம். ஆனல் வாங்க விலை அதிகமில்லை.

Printed and Published by N. VEERAPPAN for Dhana Vysian Company Ltd, at the Kumaran Power Press, Karaikudi. (S. INDIA)

